4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண் எம். 8798.

கதிர் 11 | மதுரை | 12-5-73 | சனி | மலர் 110

## சீனத்துடன் கலாச்சார பரிவர்த்தனை
### சுவரண்சிங் அறிவிப்பு

புதுடில்லி, மே. 10—
மக்கள் சீனத்துடன் விளையாட்டு மற்றும் கலாச்சார குழுக்களை பரிவர்த்தனை செய்து கொள்வதற்கு இந்தியா தயாராக இருக்கிறது என இந்திய வெளி விவகார அமைச்சர் சுவரண்சிங் அறிவித்துள்ளார்.

இதனடிப்படையில், கல்கத்தாவைச் சேர்ந்த மருத்துவர் ஒருவரை, பல்வைத்தியம் பற்றி அறிவதற்கு மக்கள் சீனத்திற்கு அனுப்பி உள்ளதாகவும் கூறினார்.

## 1500 விவசாய தொழிலாளர் கைது!

தொடுபுழா, மே. 10—
கேரள மாநிலத்தில், சுருளி - கீரித்தோடு பகுதியில் குடிசைகள் கட்டி குடி இருந்துவந்த 500 விவசாயத் தொழிலாளர்களின் குடும்பங்களை, இரவோடுஇரவாக கேரள அரசாங்கம் அக்கிரமமாக வெளியேற்றிவிட்டது. குடிசைகள் நெருப்பிட்டுக் கொளுத்தப்பட்டன, 1500 பேரை போலீசார் கைது செய்தனர்,

இந்தக்கொடிய சம்பவம் சென்ற 7-ம்தேதியன்று நடந்தது,




அண்மையில் அலங்காநல்லூர், சோழவந்தான் ஆகியஊர்களில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக் கூட்டத்தை, இரவு 10 மணியானதும் போலீசார் அக்கிரமமாக தடுத்தனர். இதேபோல் பல ஊர்களிலும் எதிர் கட்சிகளின் பொதுக் கூட்டத்தைப் போலீசார் தடுத்தனர்.

ஆனால், திமுகவின் பொதுக் கூட்டத்துக்கோ-அக்கட்சி விரும்பும் நேரம் வரை நடத்துவதற்கு போலீசார் அனுமதிக்கின்றனர்.

தி. மு. க. அரசின் ஜனநாயக லட்சணம் இதுதான்!

—செய்தி

# மே 20ஆம் தேதிக்குள் சமரசம் இல்லையேல் பொதுவேலைநிறுத்தம்
## கோவை மாவட்ட ஐக்கிய பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத் தலைவர்கள் அறிவிப்பு

கோயமுத்தூர், மே. 11—
சீக்கிரமே தீர்த்து வைக்கிறோம், பொது வேலை நிறுத்தத்தை ஒத்தி போடுங்கள் என்று முதலமைச்சர் கருணாநிதியும், கோவை மாவட்டக் கலெக்டரும் கேட்டுக் கொண்டதின் பேரில் 11-5-73முதல் நடைபெறுவதாகவிருந்த கோவை மாவட்ட பஞ்சாலைத் தொழிலாளர்களின் பொதுவேலைநிறுத்தம், 10 நாட்களுக்கு ஒத்தி போடப்பட்டது.

கலெக்டர் கேட்டுக் கொண்டதைப்பற்றியும், போராட்டம் தொடங்குவது பற்றியும் ஆலோசிக்க, கோவை மாவட்டத்திலுள்ள 85 மில்களைச் சேர்ந்த 300க்கு மேற்பட்ட தீவிர ஊழியர்களும், கிளைத் தலைவர்களும் அடங்கிய கூட்டம் நேற்று நடந்தது.

இக்கூட்டத்திற்கு தேசீய பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தலைவர் செங்காலியப்பன் தலைமைவகித்தார்.

சி.ஐ.டி.யூ. சங்க சார்பில் தோழர்கள் கே. ரமணி நஞ்சப்பன் முதலானோர் கலந்து கொண்டனர். ஐக்கிய பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் சார்பில் தோழர்கள் சின்னத்துரை கோவிந்தன் முதலியவர்கள் கலந்து கொண்டனர்.

### ஒத்தி வைத்தது ஏன்?

பொதுவேலை நிறுத்தத்தை 10 நாட்களுக்கு ஒத்தி, வைத்தது ஏன் என்பதைப் பற்றி தொழிலாளர் தலைவர்கள் குறிப்பிட்டதாவது:

கடந்த 8-5-73ல் மாவட்ட கலெக்டர் அவர்கள், தொழிற்சங்கத் தலைவர்களையும் மில் முதலாளிகள் சங்கப் பிரதிநிதிகளையும் அழைத்துப் பேசினர்.

தொழிற்சங்கத் தலைவர்கள், மின்வெட்டால் பாதிக்கப்பட்டுள்ள தொழிலாளர்களுக்கு, உடனடியாக ஏதாவது ஒரு நிவாரணத் தொகை அளிக்கப்பட வேண்டுமென்று வற்புறுத்தினர். முதலாளிகள் தரப்பில், அதற்கு இணக்கம் தெரிவிக்க மறுத்தனர். பின்னர் கலெக்டரும் முதலாளிகளை நெருக்கவே, தொழிலாளர்களின் போராட்ட ஆவேசத்தையும் கண்டு வேறு வழியில்லாத நிலைமையில் சிக்கிய முதலாளிகள், 14-5-73ல் தங்களுக்குள் கூடிப் பேசி முடிவு சொல்லுவதாகக் கூறினார்கள்.

### பதினான்காம் தேதி பிற்பகல் ஸ்ட்ரைக்

முதலாளிகள் கூடிப்பேசுகின்ற அந்த 14-ம் தேதி பிற்பகலில் அரை நாள் பொது வேலை நிறுத்தம் செய்வதென்றும் — அன்று பத்தாயிரக்கணக்கான தொழிலாளர்க கொண்ட பிரம்மாண்டமான ஊர்வலமும் — பொதுக்கூட்டமும் நடத்த தொழிலாளர் தலை தலைவர்கள் தீர்மானித்திருக்கிறார்கள்.

### கோரிக்கை என்ன?

மின்வெட்டால் பாதிக்கப்பட்ட அனைத்து தொழிலாளர்களுக்கும் முழுச் சம்பளம் நட்ட ஈடாகக் கொடுக்க வேண்டும் என்பதும், அதிக அளவில் கஷ்டப்படும் பதிலி தொழிலாளர்களின் கோரிக்கைகளை தாராளமான முறையில் கவனிக்க வேண்டுமென்பதுமே முக்கிய கோரிக்கைகளாகும்.

### இருபதாம் தேதி எரிந்து கட்டுக!

மேலேகண்டகோரிக்கைகளுக்கு 20-5-73க்குள் நல்லமுறையில் சமரசம் ஏற்படாவிட்டால் 20-ம்தேதி இரவு 12 மணிக்கு மேல் கோவை மாவட்டமே கிடுகிடாய்க்கும் படியான பஞ்சாலைத் தொழிலாளர் பொது வேலை நிறுத்தம் ஆரம்பமாகும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

களத்தில் குதிக்க தொழிலாளர்கள் கச்சை வரிந்து கட்டி வருகிறார்கள்.

## மதுரை மாவட்டத் தோழர்களுக்கு ஓர் அவசர அழைப்பு

மதுரை மாவட்டத்திலுள்ள மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர்கள், அனுதாபிகள், ஆதரவாளர்கள் ஆகிய அனைவருக்கும், கட்சியின் மதுரை மாவட்டக் குழு விடுக்கும் அவசர வேண்டுகோள்.

தோழர்களே!

திண்டுக்கல் நாடாளுமன்றத் தொகுதியின் உபதேர்தல் நடைபெற இன்னும் 10 நாட்களே உள்ளன.

இந்திரா காங்கிரசினர் பணப் பெட்டிகளுடன், நூற்றுக்கணக்கான ஜீப்களுடன் சுற்றிவருகிறார்கள். மத்திய மந்திரிகள் ஒருவர்பின்னொருவராக முகாமிட்டு, ஊர்ப் பெருந்தனக்காரர்களைப் பிடிப்பதில் முனைந்திருக்கிறார்கள்

தி. மு. அமைச்சர்களோ, மற்ற எல்லா வேலைகளையும் விட்டுவிட்டு, எல்லா வேலைகளையும் திண்டுக்கல் தேர்தல் வேலையாக ஆக்கிக்கொண்டு, அரசாங்கத்தின் அத்தனை இலாகாக்களுக்கும் சொந்தமான ஆட்களையும், விளம்பர போர்டுகளையும், ஜீப்புகளையும் வேன்களையும் எடுத்துக்கொண்டு, சட்டமன்றத் தொகுதி ஒவ்வொன்றுக்கும் இத்தனை லட்சம் ரூபாய் செலவிடுவது என்ற முடிவில் அடியாட்கள் சகிதமாகவும், போலீஸ்படையை சாதகமாக ஆக்கிக் கொண்டும் பவனி வருகிறார்கள். அவர்களும் பெருந்தனக்காரர்களைப் பிடிப்பதிலும், ஆட்களை காசுக்கு வாங்குவதிலும் ஈடுபட்டிருக்கிறார்கள். பணத்தை தண்ணீர் பட்டபாடாகச் செலவழித்துக் கொண்டு இருக்கிறார்கள். ஆங்காங்கு மாற்றுக்கட்சி ஊழியர்களைத் தி. மு, க. வினர் திட்டமிட்டுத் தாக்கி வருகிறார்கள்.

குறிப்பாக அ. தி. மு. க. தேர்தல் கூட்டங்களில் கல்வீசி, கலாட்டா செய்கிறார்கள். ஊழியர்களைப் படுகொலை புரிகிறார்கள்.

சிண்டிக்கேட் காங்கிரஸோ, நிலப்பிரபுக்களின் பணபலத்தோடும், சுதந்திராக் கட்சியின் ஆதரவோடும் புகுந்திருக்கிறது. ஜனசங்கத்தின் ஆதரவும்கிடைக்குமென்று கூறுகிறார்கள்.

இந்நிலையில், நமது கட்சியின் ஆதரவைப் பெற்ற அ. தி. மு. க. வேட்பாளரை பத்தாயிரக்கணக்கான வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெறச் செய்ய வேண்டியது நமது கடமை.

நமது கட்சியின் தமிழகத் தலைவர்கள், பேச்சாளர்கள் அனைவரும் களத்தில் இறங்கி விட்டனர்.

இச்சமயத்தில் மதுரை மாவட்டத் தோழர்களின் கடமை என்ன?

கட்சி உறுப்பினர், அனுதாபிகள், ஆதரவாளர்கள் அனைவருமே இம்மாதம் 10ம் தேதி முதல் வாக்குப் பதிவு நாளான 20-ம் தேதிவரை —சோழவந்தான், நிலக்கோட்டை, திருமங்கலம், உசிலம்பட்டி. திண்டுக்கல், ஆத்தூர் ஆகிய 6 தொகுதிகளிலும் பணியாற்ற வேண்டும்.

எங்கெங்கு ஊர்களிலெல்லாம் தங்கள் உறவினர்களும், நண்பர்களும் இருக்கின்றார்களோ, அங்கெல்லாம் சென்று — ஆங்காங்குள்ள கட்சித் தேர்தல் அலுவலகங்களுடன் தொடர்பு கொண்டு—வேலைப் பிரிவினை செய்து கொள்ள வேண்டும். வீட்டுக்கு வீடு சென்று வாக்காளர்களைச் சந்தித்து இரட்டை இலைச் சின்னத்தில் முத்திரையிட வேண்டிய அவசியம் பற்றி விளக்கிக் கூற வேண்டும், பிரச்சார வேலைகளில் முழுமூச்சுடன் இறங்க வேண்டும்.

தேர்தல் வேலைக்காகவே 10 நாட்களையும் ஒதுக்க வேண்டும். உடனடியாக முதல் தடவையாக, 4 நாட்களும், தேர்தல் நெருக்கத்தில் ஒரு4நாட்களும் சென்று வேலை செய்ய வேண்டும். ஒவ்வொருவரும் தத்தம் சொந்த செலவிலேயே போய் வரவேண்டும்.

இண்டிகேட், சிண்டிகேட், தி. மு. க. ஆகிய மும்முனை எதிர்ப்பை முறியடித்து - நமது ஆதரவுபெற்ற அ. தி. மு. க. வேட்பாளர் வெற்றிவாகைசூட — முழுமூச்சுடன் பணியாற்றிட வேண்டும்.

**— ஏ. பி. பழனிச்சாமி,**
செயலர், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி,
மதுரை மாவட்டம்.

## அமைச்சர் ராமனுக்கு மின் சப்ளை செய்ய தனி டிரான்ஸ்பார்மர்
### மின்சார வாரியத்தின் ஒழுங்கீன நடவடிக்கை

திண்டுக்கல், மே. 9—
திண்டுக்கல் தொகுதியில் தி. மு. க. தேர்தல் வேலைகளைச் செய்வதற்கு அப்பட்டமான முறையில் அதிகார துஷ்பிரயோகம் செய்யப்படுகிறது.

திண்டுக்கல்லில் தேர்தல் வேலையைக்கவனிக்க முகாமிட்டிருக்கும் அமைச்சர் ஓ. பி. ராமன தங்கியிருக்கும் இடத்துக்கு இடைவிடாமல மின்சார சப்ளை கிடைப்பதற்கு விசேட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இதற்காக அதிகமின்சார அழுத்தம் கிடைக்க வேண்டும் என்பதற்காக ரூ 5000 செலவில் புதிய டிரான்ஸ்பார்மர் பொருத்தப்பட்டுள்ளது.

இதற்காக இரவு பகலாக வேலை நடக்கிறது.

அமைச்சர் ஓ. பி. ராமன் தங்கி வேலைசெய்வதற்குஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் இடம் கோட்ட மின் பொறியாளர் வீடாகும்.

அமைச்சரை கவனித்துக் கொள்ளுவதற்கும்மின் வாரிய நாட்கூலித தொழிலாளர்களும் நியமிக்கப்பட்டுள்ளனர்.

ஓ. பி. ராமன் தங்கியிருக்கும் இடத்துக்கு தடங்கலின்றி மின்சார சப்ளை கிடைக்க ஏற்பாடு செய்யப்படும், போது கோவிலூர் மக்களும் விவசாயிகளும் போதிய அழுத்தமில்லாமல் மின்சாரம ஒழுங்காகக் கிடைக்கவில்லை என்று முறையிட்டபோது மின்சார வாரியம் அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. இதற்காக விசேடடிரான்ஸ்பார்மர் அமைக்கவேண்டும் என்று கேட்டதற்கும் மின்சார வாரியம் அக் கோரிக்கையை நிராகரித்தது.

## இந்திரா காங்கிரசில் சமூக விரோதிகள்
### மே. வங்க தலைவர்கள் ஒப்புதல்

கல்கத்தா, மே. 9—
மேற்குவங்க இந்திரா காங்கிரஸ் கட்சிக்குள் ஏற்பட்டுள்ள குடுமிப்பிடிச் சண்டை கேவலப்பட்டு போனதைக் கண்டு பொறுக்க முடியாமல், மேற்குவங்க இந்திரா காங்கிரசின் தலைவர் அருண் மொய்த்ரா கடுமையாக கண்டித்துள்ளார். இது சம்பந்தமாக அவர் கட்சியினருக்கு அறிக்கை அனுப்பியுள்ளார்.

கட்சிக்குள்ளேயுள்ளவர்களில் ஒருவரை எதிர்த்து ஒருவர் அறிக்கை விடுவதும், மறு எதிர்ப்புஅறிக்கை விடுவதும் என்பது கடுமையான நடவடிக்கைக்குஉள்ளாக்கப்படும் எனஎச்சரித்துள்ளார்.

மொய்த்ரா இந்த எச்சரிக்கை அறிக்கையை வெளியிடுவதற்குமுன் மேற்கு வங்க முதல் அமைச்சர் ரேயுடன் நீண்ட நேரம் ஆலோசித்தாராம்.

இந்த ஆலோசனைக்குப் பின்னர் அவர் தனது அறிக்கையினை விடுத்தார். அதில், தவறான நடவடிக்கைகளில் ஈடுபடும் சமூக விரோதசக்திகள் ஒரு பலமான சக்தியாக இருப்பதாகவும், அவர்கள் எடுக்கும் தவறான நடவடிக்கைகளிலிருந்து தம்மை தப்பித்துக்கொள்ள கட்சியின் மேல்மட்ட அளவில் செல்வாக்கும் படைத்துள்ளனர் என்றும் அவரது கட்சிக்குள் இருக்கும்அசிங்கத்தை வெளிப்படுத்தினர்.

### விலைகுறியீட்டெண்

புதுடில்லி. மே. 9—
1973 மார்ச் மாதத்துக்கானதொழிற்சாலைஊழியர்களுக்கான உபயோகிப்பாளர் விலைக் குறியீட்டெண் (ஆதாரம் 1960—100) 216 ஆக இருந்தது.

### டீசல் பற்றாக்குறை

புதுடெல்லி, மே. 9—
கடந்த சில ஆண்டுகளில் டீசல் எண்ணெயின் தட்டுப்பாடு மேலும் மேலும் அதிகரித்து வருகிறது; 1973-ம் ஆண்டில் 52 லட்சத்து 91 ஆயிரம் டன் அதிவேக டீசல் எண்ணெயும், 14 லட்சத்து 61 ஆயிரம் டன் இலேசுரகடீசல் எண்ணெயும் தேவைப்படும் என்று மத்திய பெட்ரோலியம, ரசாயனப் பொருள் அமைச்சா டி. கே, பரூவா மே. 7-ந்தேதி மாநிலங்களவையில் தெரிவித்தார்.

ஆனால் உற்பத்தியாகுமென்று எதிர்பார்ப்பது எவ்வளவு தெரியுமா?

1973-ம் ஆண்டில் 48 லட்சத்து 30 ஆயிரம் டன் அதிவேக டீசல் எண்ணெயும், 10 லட்சத்து 85 ஆயிரம் டன் இலேசுரக டீசல் எண்ணெயும் இந்தியாவில் உற்பத்தியாகும். மேற்கொண்டு தேவைப்படும் 4 லட்சத்து 61 ஆயிரம் டன் அதிவேக டீசல் எண்ணெயும், 3 லட்சத்து 75 ஆயிரம் டன் இலேசுரக டீசல் எண்ணெயும் இறக்குமதி மூலம் சரிகட்டப்படுமாம்.

### விதிகளைமீறி அனுமதியில்லாமல்
## தி. மு. க. தேர்தல் ஆபீசுக்கு மின் சப்ளை

சமயநல்லூர், மே. 7—
சமயநல்லூர் பகுதியில தனிச்சியம் கிராமத்தில் தி மு க தேர்தல் அலுவலகம் ஒன்று அமைத்திருக்கிறார்கள்.

இதற்கு மின்சார சப்ளை செய்வதற்காக மின் வாரிய விதிகளைக் குப்பைத் தொட்டியில் தூக்கி எறிந்துள்ளது.

மின்சார சப்ளைக்கு கம்பிகள் சுமார் 300 அடி தூரத்திலிருந்து — சர்வீஸ் எண் 23லிருந்துசட்டத்துக்குபுறம்பாக ரோடுக்குக் குறுக்கே கொண்டுவரப்பட்டுள்ளது. இவ்வாறு செய்வதற்கு அனுமதியும் வாங்கவில்லை.

இதுபற்றி மேலதிகாரிகளுக்கு முறையீடு செய்த வயர்மேனை ஊர் மாற்றம் செய்துள்ளனரே யொழிய, அனுமதியின்றி மின்சார சப்ளை செய்தவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படவில்லை.

### சுதந்திர இந்தியாவில் வசதியடைந்தோர் யார்?

ரூ. 51 கோடியாக இருந்த பிர்லாவின் சொத்து ரூ. 950 கோடியாக இன்று உப்பியுள்ளது.

ரூ. 95 கோடியாக இருந்த டாடாவின் சொத்து ரூ. 850 கோடியாக இன்று பெருத்துள்ளது,

## அ. தி. மு. க. மீது மோகன் பாய்ச்சல்

**திண்டுக்கல், மே. 10—**
**அகில இந்தியச் சரக்கு, அகில உலகச் சரக்கு ஆகிய அத்தனை சரக்குகளையும் தன் சட்டைப் பையில் வைத்திருப்பதாகக் கருதிக் கொண்டு, "அண்ணா தி மு க தலைவர்களிடம் சரக்கு இல்லை" என்று மத்திய மந்திரி மோகன் குமாரமங்கலம் சாடியுள்ளார்.**

அ.தி.மு.கவினர். தி.மு.க. கூடாரத்தில் உட்கார்ந்து இருந்தவர்கள் என்றும, அவர்களும் லஞ்சம் ஊழல் பற்றிப் பேசுகிறார்களென்றும் இப்படிப்பட்டவர்கள் கூட இந்தத் தேர்தலில் போட்டியிடுகிறார்களே! என்று, ஏதோ ஆகாதவர்கள் அரங்கத்துக்கு வந்து விட்டதாக நினைத்து ஆத்திரப்பட்டுப்பேசினர்.

ஊழல் புகார் பட்டியல்களை மத்திய அரசிடம் எம். ஜி. ஆர். சமர்ப்பித்துள்ளதைப் பற்றிக் கிண்டல் செய்து, மோகன் குமார மங்கலம் பேசினர்.

**[illegible]**

இது குறித்து மந்திரி

(4-ம் பக்கம் பார்க்க)

## ஏறுது ஏறுது வரிச்சுமை ஏறுது

**1972-73-ல் புதிய வரிகள் ரூ. 183 கோடி**
**1973-74-ல் ,, ரூ. 293 கோடி**

### யார் தலையில் வரி?

நடப்பாண்டு பட்ஜெட்டில் பொருள்களின் மீது போட்டு மக்களிடம் வசூலிக்கும்
**மறைமுக வரியோ ரூ. 274 கோடி**

உழைக்காமல் கொழுக்கும் பணக்காரர்கள் மீது போடும்
**நேரடி வரி ரூ. 19 கோடிதான்**

### மொத்த வரியில்

**மறைமுக வரி 93 சதவிகிதம்**
**நேர்முக வரி 7 சதவிகிதமே**

தீக்கதிர்

# எவர்சில்வர் தகடு ஏற்றுமதி மோசடி

# அரசாங்க தஸ்தவேஜு மாயமாய் மறைந்தது

## மாநிலங்கள் அவையில் கடும் மோதல்

புதுடில்லி, மே 7— "கர்நாடக எக்ஸ்போர்ட் ஹவுஸ்" என்ற நிறுவனம் எவர்சில்வர் தகடு இறக்குமதி செய்வதில் தில்லுமுல்லு செய்து கொள்ளையடித்திருப்பதற்கு அரசாங்கம் உதவி செய்கிறது. இது சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகளே (பைல்) இப்போது மாயமாய் மறைந்து விட்டது.

இந்த பைல் மறைந்தது சம்பந்தமாக மாநிலங்கள் அவையில் இன்று காரசாரமாக விவாதம் நடைபெற்றது.

சந்திரசேகர், கிருஷ்ன் கந்தா, ஏ. ஜி. குல்தர்னி போன்ற காங்கிரஸ் உறுப்பினர்களே "கர்நாடக் எக்ஸ்போர்ட்" நிறுவனம் கொள்ளையடிப்பதற்கு அரசாங்கம் உதவி செய்திருப்பதாகக் குற்றம் சாட்டினர்.

இது சம்பந்தப்பட்ட அரசாங்க பைல் கடந்த ஆறு ஏழு மாதமாகக் காணாமல் போய்விட்டது என்றும் அவர்கள் குற்றம் சாட்டினர்.

வர்த்தக இலாகா துணை அமைச்சர் ஏ. சி. ஜார்ஜ் "பைல் உண்மையில் காணாமல் போகவில்லை, அது தவறுதலாக வேறிடத்தில் வைக்கப்பட்டிருக்கக்கூடும்" என்று பதிலளித்தார்.

பைல் காணாமல் போய்விட்டது என்பதற்கு அரசாங்க உத்தரவு ஒன்றை கிருஷ்ண சந்த் வாசித்துக் காட்டினர். இந்த பைல் அழிக்கப்பட்டு விட்டது என்று வர்த்தக இலாகாவில் கருத்து நிலவுவதாகவும் அவர் கூறினர்.

## கைத்தறி துணி விற்றவர்கள் ஆட்சிக்கு வந்ததும் செய்ததென்ன?

தமிழ்நாட்டிலுள்ள மில்களில் ரூ 10 கோடி மதிப்புள்ள 30 ஆயிரம் நூல் பேல்கள் தேங்கிக் கிடக்கின்றன. இவற்றை விடுவிப்பதற்கு டெக்ஸ்டைல் கமிஷனரிடமிருந்து உத்திரவு வராததால் கிட்டங்கிகளிலிருந்து நூல் பேல்கள் வெளிவர முடியவில்லை.

மின் வெட்டு காரணமாக ஏற்கனவே மில்களில் முழு உற்பத்தி செய்ய முடியாத நிலைமை ஏற்பட்டு பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையிழந்து தவிக்கின்றனர்.

இந்நிலையில் மில்களில் நூல் தேக்கம் ஏற்பட்டு பல மில்கள் மூடப்படும் நிலைமை உருவாகியிருப்பதாக "எகனாமிக் டைம்ஸ்" பத்திரிகையின் ஏப் 18-ம் தேதி இதழ் குறிப்பிட்டிருப்பது நிலைமை எவ்வளவு விபரீதமாகியுள்ளது என்பதை எடுத்துக் காட்டுகிறது.

இந்த ஆண்டு துவக்கத்திலிருந்து நூல் விலை அபரிமிதமாக ஏறி கை நெசவாளர்கள் பெரும் பாதிப்புக்குள்ளானார்கள்.

தமிழ் நாடெங்கும் பல்லாயிரக்கணக்கான நெசவாளர்கள் அடையாளக் கார்டு வழங்கி நியாய விலையில் தங்களுக்கு நூல் வழங்கவேண்டுமென்று கிளர்ச்சி செய்தார்கள்.

விவசாயத்துக்கு அடுத்தபடியாக பெரும்பான்மையான மக்கள் ஈடுபட்டிருக்கும் இத்தொழிலையும் இதில் ஈடுபட்டிருக்கும் மக்களையும் பாதுகாக்க வேண்டும் என்ற அக்கறை தி. மு. க. அரசுக்கு சிஞ்சிற்றும் இல்லை. வெறும் பிரச்சாரத்துக்காக அண்மையில் முக்கியமான நகரங்களுக்கு வந்து ஒரு நாள் கைத்தறி துணியை விற்றதற்குமேல் அமைச்சர்கள் ஒன்றும் செய்யவில்லை. இன்று நெசவாளர்கள் நட்டாற்றில் விடப்பட்டுள்ளார்கள்.

இந்நிலையில், நெசவாளர்கள் போராட்டங்கள் திரும்பத்திரும்ப வெடித்துக்கொண்டிருக்கின்றன.

இந்தியாவில் உள்ள நூற்பு ஆலைகள் மிகுதியாக உள்ள மாநிலங்களில் தமிழ்நாடும் ஒன்றாகும்.

கள்ளமார்க்கெட் காரர்கள் நூலைப் பதுக்குவதின் மூலம் நாடெங்கும் நூல் தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது.

இந்நிலையில் மில்களிலிருந்து நேரடியாக நூலை வாங்கி நெசவாளர்களுக்கு நியாய விலையில் வழங்கும் பொறுப்பை மத்திய அரசும், மாநில அரசும் முறையாக நிறைவேற்றத் தயாராக இல்லை. ஒரு பக்கம் மில்களில் நூல் தேங்கிக்கிடக்கும் நிலைமையும், மறுபக்கம் நூல் கிடைக்காமல் நெசவாளர்கள் கிளர்ச்சி செய்யும் நிலைமையும் தோன்றியுள்ளது.

நாடு முழுவதுக்கும் மில்களிலிருந்து நூலை எடுத்து ஒவ்வொரு மாநிலத்துக்கும் ஒதுக்கீடு செய்யும் பொறுப்பை அண்மையில் மத்திய அரசு மேற்கொண்டது.

இந்த ஏற்பாட்டிற்கு இணங்கியிருக்கும் தமிழக அரசு "சட்டி சுட்டதடா கைவிட்டதடா" என்று பிரச்சனையிலிருந்து நழுவியுள்ளது.

நூல் ஒதுக்கீட்டிலும் நெசவாளர்களுக்கு நூலை வினியோகிப்பதிலும் பல்லாயிரக்கணக்கான நெசவாளர் குடும்பங்களின் வாழ்க்கை சம்பந்தப்பட்டிருப்பதை தமிழக அரசு உணர்ந்திருக்குமானால் இவ்வளவு அசட்டையாக இருக்க முடியாது.

மில்களிலிருந்து நூலை விடுவிப்பதற்கு டெக்ஸ்டைல் கமிஷனர் காலம் கடத்தும்போதுகூட தமிழக அரசு ஆட்சேபம் செய்யவில்லை.

போதிய அளவு நூல் ஒதுக்கீடு வேண்டும் என்று மத்திய அரசை எதிர்த்து சண்டை போடவும் நெசவாளர்களுக்கு அடையாளக்கார்டுகள் கொடுத்து நூல் வினியோகம் செய்யவும் தமிழக அரசு முன்வராமலிருப்பது பொறுப்பற்ற தன்மையின் எல்லைக்கே அது போயிருப்பதைக் காட்டுகிறது.

பெரிய பெரிய தொழில் முதலாளிகளுக்கு மின் கட்டணச் சலுகைகளையும், மற்ற சலுகைகளையும் அளித்து அவர்களுடைய கொள்ளை லாபத்தைப் பாதுகாப்பதற்கு இந்த அரசு எத்தனையோ வழிகளில் உதவி செய்ய துடித்துக் கொண்டிருக்கிறது.

அந்த அக்கறையில் நூறில் ஒரு பங்கு அக்கறையிருந்தால் நெசவாளர்கள் இன்று தெருவில் நிற்கும் நிலை ஏற்பட்டிருக்குமா?

ஆட்சிக்கு வருவதற்கு முன், தோள் வலிக்க கைத்தறி விற்றதாகப் பசப்பிக் கொண்டிருக்கும் தி. மு. க. தலைவர்கள், இன்று ஆயிரக் கணக்கான நெசவாளர்கள் மீது அடக்கு முறையை ஏவி விடுவதற்கும், சிறையிலடைத்து அவர்களை வதைப்பதற்கும் வெட்கப்பட வேண்டாமா?

கைத்தறி தொழில் நசிந்து வேலையிழந்திருக்கும் மக்களை, வெறும் கண்துடைப்புச் சலுகைகளை அளிப்பதால் மட்டும் போராட்டப் பாதையிலிருந்து விலகச் செய்து விட முடியாது.

## கோவை நெசவாளர் இரயில்முன் மறியல்

கோயமுத்தூர், மே 10— நியாய விலையில் நூல் வினியோகம் அடையாள கார்டு மூலம் நெசவாளர்களுக்கே நூல்களை முதலிய கோரிக்கைகளை வலியுறுத்தி கோவை ஒண்டிப்புதூரைச் சேர்ந்த நெசவாளர்கள் இரயில் முன் படுத்து மறியல் செய்தனர்.

மே 6ந் தேதியன்று பிற்பகல் 2½ மணியளவில் போத்தனூர் வழியே செல்லும் "ஜெயந்தி எக்ஸ்பிரஸ்" (கொச்சியிலிருந்து டெல்லிக்குச் செல்லும் இரயில்) வண்டி முன் படுத்து முழக்கங்களை எழுப்பி மறியல் செய்தனர். இந்த மறியல் போராட்டத்துக்கு பி. ஆர் சீதாராமன் தலைமை வகித்தார். அவரையும், 8 பெண்கள் உட்பட 68 பேரையும் இரயில்வே போலீசார் கைது செய்தார்கள்

## ஆசிரியருக்கு...

## கோடம்பாக்கம் இ. எஸ். ஐ. மருத்துவ மனை குறைகள் கவனிக்கப்படுமா?

சென்னை கோடம்பாக்கத்திலுள்ள இ. எஸ். ஐ. சி. மருத்துவமனையில் வைத்தியம் பார்த்துவரும் தொழிலாளர்களும், அவர்களது குடும்பத்தினரும் முறையாக கொடுத்த புகாரின் பேரிலும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வடபழனி கிளையின் சார்பிலும் நேரில் சென்று பார்வையிட்டதின் பேரில் கீழ்க்கணும் குறைபாடுகளை தங்களது கவனத்திற்கு கொண்டு வருகிறோம்.

1 தொழிலாளர்களுக்கு மருத்துவ வசதி தரும் மருத்துவமனைபணியாளர்களுக்கு போதிய இட வசதியும் இல்லை: குறிப்பாக காற்று வசதியும் இல்லை! புழுக்கத்தின் காரணமாக தொழிலாளரிடையே முகம் கோணாமல் பணி செய்ய உடனடியாக வசதிகள் செய்து கொடுக்க வேண்டும்.

2 மேற்படி மருத்துவமனையில் தொழிலாளர்களும் அவர்களது குடும்பத்தினரும் வசதியாக வைத்தியம் செய்து கொள்ளக்கூடிய முறையில் தொழிலாளர்களுக்கு காலை நேரத்தில் 7 மணி முதல் 9 மணி வரையிலும், குடும்பத்தினருக்கு 9 மணி முதல் 11 மணிவரையிலும்—மாலை நேரத்தில் குடும்பத்தினருக்கு 3 மணி 5, மணி வரையிலும் தொழிலாளர்களுக்கு 5 மணி முதல் 7 மணி வரையிலும் முறையே நேரங்களை மாற்றி அமைக்கவேண்டும்.

3 மருத்துவரும் (டாக்டர்) செவிலியரும் (நர்ஸ்) உதவியாளர்களும் மிகக் குறைவாக இருக்கிறபடியால், குறிப்பிட்ட நேரங்களில் தொழிலாளர்கள் வைத்தியம் செய்து கொண்டு, தங்களது பணிகளுக்கு செல்ல காலதாமதமாகிறது. எனவே கூடுதலான மருத்துவர்களையும், செவிலியர்களையும், உதவியாளர்களையும் நியமிக்க வேண்டுகிறோம். மேலும் பணியாற்றக் கூடியவர்களான மருத்துவர்களும், செவிலியர்களும், உதவியாளர்களும் விடுப்பு எடுத்தால், மாற்றுப் பணியாளர்களை ஏற்பாடு செய்து பணியாற்ற நடவடிக்கை எடுக்கவேண்டும்.

4 சுகாதாரமற்ற முறையிலும் வசதிகள் குறைவாகவும் உள்ளது. நோயாளிகள் வந்து இருப்பதற்கு போதிய இட வசதிகளே இல்லை மேலும் நோயாளிகளுக்கு முக்கியமாக வேண்டிய காற்று வசதி கிடையாது. வரும் வேனல் காலத்தில் நோயாளிகளை புழுக்கத்தில் வாடவிடக்கூடாது—வரும் நோயாளிகள் நெருக்கடியினால் மிகவும் அவதிக்குள்ளாகிறார்கள்—எனவே உடனடியாக இட வசதியும் காற்று வசதியும், மற்றும் தேவையான சுகாதார வசதிகளையும் செய்ய வேண்டும்.

5 தொழிலாளர்கள் உடல்நலமின்றி ஐயனாவரம் மருத்துவமனைக்குச் செல்ல வேண்டியயிருந்தால் ஆம்புலன்ஸ் வண்டி கிடையாது அதனால் நோயாளிகள் துரிதமாக செல்ல முடியாமல் அவதிக்கு ஆளாகி மிகவும் கஷ்டப்படுகிறார்கள். மேலும் வீட்டிலிருந்து வர முடியாத நோயாளிகளை கொண்டு வரவேண்டும்- இதற்காக இந்த மருத்துவமனைக்கென்று ஒரு ஆம்புலன்ஸ் வண்டி ஒதுக்கவேண்டும்

6 மருந்து, மாத்திரைகள் தட்டுப்பாடு இருந்து வருகிறது ஐயனாவரம் மருத்துவமனையிலிருந்து வரக்கூடிய நோயாளிகளுக்கு மாத்திரை மருந்து வாங்கி சாப்பிடச் சொல்லி சீட்டு எழுதி கொடுத்துவிட்டால், அந்த மருந்துகள் இங்குள்ள மருத்துவமனையில் இல்லாததால், நோயாளிக்கு உடனடியாக மருந்து கிடைக்காமல், நோயாளிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். எனவே இங்குள்ள மருத்துவ மனைக்கு தேவையான மருந்து, மாத்திரைகள் தட்டுப்பாடு இல்லாமல் சப்ளை செய்ய வேண்டும்.

7. இந்தப்பகுதியில் லோக்கல் ஆபீஸ் ஒன்று இல்லாததால் தொழிலாளர்களுக்கு கிடைக்கக் கூடிய நிதி உதவிகளைப் பெறுவதற்கும், மற்ற இதர வசதிகள் பெறுவதற்கும் பல மைல்கள் சென்றுவர வேண்டிய சிரமம் உள்ளது. காலமும், காசுகளும், சிரமமும் அதிகமாகிறது எனவே தொழிலாளர் வசதிக்கேற்ப இந்தப் பகுதியில் அவசியம் லோக்கல் ஆபீஸ் ஒன்று ஏற்படுத்த வேண்டும்.

மேற்கண்ட குறைபாடுகளை அகற்றிட—வசதிகள் பெருகிட—உடனடியாக நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமாய் சுகாதார அமைச்சர் அவர்களையும் மெடிகல் ரெப்ரீ அவர்களையும் மெடிகல் ஆபீசர் அவர்களையும் கேட்டுக்கொள்கிறோம்.

இப்படிக்கு

எஸ். நடராசன்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலர்

வடபழனி கிளை

## உலக சுகாதார ஸ்தாபனத்தில் ஜெர்மன் சனநாயக குடியரசுக்கு இடம்

கி. பெர்லின், மே 10— உலக சுகாதார ஸ்தாபனத்தில் ஜெர்மன் சனநாயக குடியரசு (கி. ஜெர்மனி) க்கு இடம் அளிக்கப்பட்டுள்ளது.

சோசலிஸ்ட் நாடுகளில் ஒன்றான கிழக்கு ஜெர்மனிக்கு இதுவரை இந்த ஸ்தாபனத்தில் இடமளிக்கப்படாமல் இருந்தது.

பல நாடுகளின் தொடர்ச்சியான முயற்சியின் பலனாக கடந்த செவ்வாய்க் கிழமை முதல் கிழக்கு ஜெர்மனி உலக சுகாதார நிலையத்தின் அங்கத்தினராக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

## மதுரை வார்டுகளில் மே தின விழா

மதுரை, மே. 7— மதுரை 25-வது வார்டில் மேதினத்தை யொட்டி செங்கொடிகள் ஏற்றப்பட்டன.

வடக்கு மாசி வீதியில் எஸ் எஸ். கபே தொழிலாளர்கள் செங்கொடியை ஏற்றி வைத்தனர். அதற்கு பக்கத்தில் அதிமுகவைச் சேர்ந்தவர்கள் அ. தி. மு. க. கொடியை ஏற்றி வைத்தனர். அதிமுக கொடியை தேசவன் ஏற்றி வைத்தார். சிறுவர்களுக்கு இனிப்பும் வழங்கப்பட்டது.

25-வது வார்டில் பல இடங்களில் கொடிகள் ஏற்றுவிக்கப்பட்டன. மேலும், மதுரை 11, 12, 27-வது வார்டுகளில் மேதின விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. 12-வது வார்டு சாக்கு தொழிலாளர்கள், வியாபாரிகள் ஏற்பாடுசெய்திருந்த விழாவில் தோழர் எஸ் அலாவுதீன் செங்கொடி ஏற்றி வைத்தார்.

11-வது வார்டில் எட்டு இடங்களில் செங்கொடிகள் ஏற்றப்பட்டன. மற்றும் சான்பாளையம், அரசமரம் பிள்ளையார் கோவில் முன்பும் மேதின கொடியேற்று விழா நடைபெற்றது.

மேற்கண்ட விழாக்களில் இசைத்தட்டு ஒலி பெருக்கிகளும், மேள வாத்தியங்களும் முழங்கியது. இனிப்புகள் வழங்கப்பட்டன.

தோழர்கள் பி. வி. கிருஷ்ணமாச்சாரி, எம். மாரி, குபேந்திரன் ஆகியவர்கள் தலைமை வகித்து செங்கொடிகள் ஏற்றினர்.

## அமைச்சர்களுக்கு வலதுகள் வக்காலத்து

புதுடெல்லி, மே 9— சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதி நியமனம் சம்பந்தமாக யாரையும் ஆலோசனை கலக்காமல் நடைமுறை விதிகளை மீறி தனக்கு வேண்டிய ஆளை அரசாங்கம் நியமித்திருப்பதற்கு விளக்கம் கேட்டு மத்திய அமைச்சர்கள் மோகன் குமாரமங்கலத்துக்கும், கோகலேக்கும் சுப்ரீம் கோர்ட் வழக்கறிஞர்கள் சங்கம் நோட்டீஸ் அனுப்பியுள்ளது.

"சங்க உறுப்பினர்கள் பொறுப்பிலிருந்து உங்களை ஏன் விலக்கக்கூடாது" என்று அந்த நோட்டீசில் கேள்வி கேட்கப்பட்டுள்ளது.

இதற்கு சம்பந்தப்பட்ட அமைச்சர்கள் விளக்கம் கொடுப்பதற்கு முன்பாகவே வலது கம்யூனிஸ்ட் தலைவரான பூபேஷ் குப்தா எம். பி. வக்காலத்து வாங்கிக் கொண்டு பேசியிருக்கிறார்.

தொழில் சம்பந்தப்பட்ட ஒழுங்கீனங்களுக்குத்தான் யாரையும் சங்கத்திலிருந்து விலக்க முடியும் என்றும் அமைச்சர்களை சங்கத்திலிருந்து விலக்குவது சட்ட விரோதம் என்றும் பூபேஷ் குப்தா கூறியுள்ளார்.

சுப்ரீம் கோர்ட்டுக்கு சாதாரண நீதிபதியை நியமிப்பதற்கே பிரதம நீதிபதியைக் கலந்து கொண்டுதான் ஜனாதிபதி நியமனம் செய்ய வேண்டும் என்று அரசியல் சட்டத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.

பிரதம நீதிபதியை நியமிப்பதற்கு இந்திய அரசாங்கம் நடைமுறை சம்பிரதாயத்தையும் மீறி யாரையும் கலந்து கொள்ளாமல் நியமனம் செய்திருப்பதற்கு நாடுமுழுவதும் நீதித்துறையிலுள்ள சட்ட அறிஞர்கள் ஒருமித்த கண்டனம் எழுப்பியுள்ளனர்.

காங்கிரசுக்கு வால்பிடிப்பதையே பிறவி எடுத்திருப்பதின் பெரும்பேறாகக் கருதும் பூபேஷ் குப்தா இந்த விஷயத்தில் கூட அமைச்சர்களுக்கு வக்காலத்துவாங்கி கொண்டு பேசியிருக்கிறார்.

## மணல் ஆலை தொழிலாளர் போராட்டம் நீடிக்கிறது

மணவாளக்குறிச்சி, மே. 10— குமரிமாவட்ட மணவாளக்குறிச்சியில் உள்ள மணல் ஆலைத் தொழிலாளர் சுமார் 1700 பேர் மே 2 முதல் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

லே-ஆப்புக்கு சம்பளம். விடுமுறை நாட்களுக்குச் சம்பளம் முதலிய கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் செய்துவரும் இத்தொழிலாளர்கள் மே 8-ந் தேதி முதல் மறியல் போராட்டத்தில் ஈடுபட்டு கைதாகி வருகிறார்கள்.

மே 3-ந் தேதியன்று காலை 10 மணிக்கு போராட்டக்குழுத் தலைவர் திரு. ஆ. பாலையா எம். எல். ஏ. தலைமையில் 13 தொழிலாளர்கள் ஆலை வாசலில் மறியல் செய்து கைதாகினர்.

நாள் தோறும் தொழிலாளர் ஊர்வலமாகச் சென்று மறியல் போராட்டம் நடத்தி வருகிறார்கள். மறியலில் கலந்து கொண்டவர்கள் கைதுசெய்யப்பட்டு மாலையில் விடுவிக்கப்பட்டு வருகின்றனர்.

இருந்தபோதிலும் மறியல் தொடர்ந்து நடக்கிறது. தொழிலாளர்கள் அனைவரும் ஆலைவாயிலின் முன் அமர்ந்து அங்கேயே கஞ்சியை கொண்டு வந்து குடித்துக் கொண்டு போராட்டத்தை உறுதியுடன் நடத்துகின்றனர்.

மே 7-ந் தேதியன்று, தமிழக சி. ஐ. டி. யூ. வின் மாநிலக்குழு உறுப்பினர் தோழர் ஜெ. ஹேமச்சந்திரன் தலைமையில் 12 பேர் மறியல் செய்து கைதாயினர்.

## இந்திரா கட்சி முதலமைச்சர் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பை மதிக்கவில்லை

எதிர்க் கட்சிக்காரர்களை, காரணம் காட்டாமல் சிறையில் தள்ளுவதற்கு என்று இந்திரா சர்க்கார் ஒரு சட்டம் செய்திருக்கிறது. அந்தப் பேய்ச் சட்டத்திற்கு பெயர் "உள்நாட்டுப் பாதுகாப்புப் பராமரிப்புச் சட்டம்" என்று பெயர்.

அந்தச் சட்டத்தில் 17-ஏ பிரிவு விசாரணையில்லாமல் காவலில் வைக்கப்படும் நபர்களை காலவரையின்றி அடைத்து வைக்கலாம் என்று கூறுகிறது.

இதன்படி நூற்றுக்கணக்கான மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவர்களும், மற்றுமுள்ள இடதுசாரி ஜனநாயக வாதிகளும் மேற்கு வங்கத்தில் சிறையில் அடைக்கப்பட்டார்கள்.

இவர்கள் நிரபராதிகள். இவர்களை விடுதலை செய்யவேண்டுமென்று எந்தக் கோர்ட்டுக்கும் போக முடியாது.

இந்த நிலையில் மேற்குவங்க கைதிகள், சுப்ரீம் கோர்ட்டுக்கு போய் வாதடினார்கள்.

அவர்கள் சார்பில் வாதாடிய வழக்கறிஞர் நாராயண் குப்தா அவர்கள், இந்திய அரசியல் சட்டத்தில் உள்ள விதிகளை எடுத்துக்காட்டி வாதாடினார்.

"இந்தியப் பிரஜை ஒருவர் விசாரணையின்றி காவலில் வைக்கப்பட்டால், மூன்று மாதத்திற்குள் அவரை பாதுகாப்பில் வைப்பதற்கான காரணங்களை அரசாங்க ஆலோசனைக் குழுவின் பரிசீலனைக்கு விட்டு, அதன் முடிவுப்படி நடந்துகொள்ள வேண்டும்"—என்று இந்திய அரசியல் சட்டத்தில் இருக்கிறது.

ஆனால், இந்த உரிமையைப் பறிக்கக்கூடிய முறையில், உள்நாட்டுப் பாதுகாப்புப் பராமரிப்பு சட்டத்தில், ஆலோசனை குழு பற்றி பேச்சே இல்லாமல் எத்தனை வருடமும் அடைத்துப் போட்டுக்கொள்ள வகை செய்துள்ளது.

இந்த முரண்பாட்டை எடுத்துக்கூறி வாதாடவே சுப்ரீம் கோர்ட்டானது பராமரிப்பு பேய்ச் சட்டத்தின் 17-ஏ விதியைக் கிழித்துப்போட்டுவிட்டது.

இந்தத் தீர்ப்பினால் நூற்றுக்கணக்கான தொழிலாளர் விவசாயி தலைவர்களை விடுதலை செய்யவேண்டிய நிர்ப்பந்தம் மேற்குவங்க அரசுக்கு ஏற்பட்டது.

அது அடக்குமுறைப் பேயாட்டத்திலேயே மூச்சுவிட்டுக்கொண்டிருக்கிற அரசானபடியினால், சிலரை விடுதலை செய்தும் அநேகரை விடுதலை செய்யாமலும் காலம் கடத்தி வருகிறது. விடுதலை செய்யப்பட்டவர்களைக்கூட அதே பராமரிப்புச் சட்டத்தின் வேறு கிரிமினல் விதிகளின்கீழ் கைது செய்து சிறையில் அடைத்திருக்கிறது.

இந்திராகாங்கிரஸ் முதலமைச்சர் சுப்ரீம்கோர்ட் தீர்ப்புக்கு மதிப்புக் கொடுக்கும் லட்சணம் இதுதான். இவர்கள்தான் சட்டத்தை மதிக்கும் மகாயோக்கியர்கள்!

## இந்திரா சர்க்காரின் எலும்புக் கூடு வியாபாரம்

இந்திய சர்க்கார் அன்னியச் செலவாணி சம்பாதிக்க என்னென்ன பொருள்களையோ அமெரிக்காவுக்கு விற்று வருகிறது. ஏற்கெனவே, திருப்பதியிலும் பழனியிலும் அடித்த மொட்டைகளினால் கிடைத்த முடிமயிர்கள் ஏற்றுமதி செய்யப்பட்டு வருகிறது.

நமது நாட்டிலுள்ள லட்சக்கணக்கான குரங்குகளும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

இப்பொழுது இந்தியர்களின் எலும்புக் கூடுகளையும் அமெரிக்காவுக்கு விற்று வருகின்றனர்.

ஒரு லட்சம் எலும்புக் கூடுகள் விற்றதில் ஒரு கோடி ரூபாய் அளவுக்கு டாலர் கிடைத்ததாம்!

இந்திய எலும்புக் கூடுகளுக்கு என்ன அவ்வளவு கிராக்கி என்று தெரியவில்லை.

வியட்னாம், கம்போடியா, லாவோஸ் ஆகிய நாடுகளில் வீசிய குண்டு வீச்சினால் மாண்டுபோன மக்களின் எலும்புக்கூடுகள் லட்சக்கணக்கில் கிடைக்குமே. அதையெல்லாம் அமெரிக்காவுக்குத் தேவை இல்லையா?

ஏன், அமெரிக்காவிலேயே ஜனங்கள் சாகாமலா இருக்கிறார்கள்! அந்தக் கல்லறைகளை நோண்டினால் எலும்புக் கூடுகள் கிடைக்காதா? அவையெல்லாம் அமெரிக்காவுக்குத் தேவை இல்லையா?

முதலில் முடிமயிரைக் கேட்டான். அப்புறம் குரங்குகளைக் கேட்டான். இப்போது எலும்புக் கூடுகளைக் கேட்கிறான்.

அவன் காசு கொடுக்கிறான் என்பதால் அத்தனையையும் அனுப்பியது இந்திரா சர்க்கார்.

இனிமேல் என்ன என்னத்தையெல்லாம் கேட்கப் போகிறானோ, இன்னும் என்ன என்னத்தையெல்லாம் விற்கப் போகிறார்களோ?

## புதிய நிர்வாகிகள் தேர்வு

ஈரோடு, மே 10— இங்குள்ள பள்ளிப்பாளையம் பவர்லூம் தொழிலாளர் சங்கத்தின் பேரவைக் கூட்டம் ஏப். 27-ல் நடந்தது.

அக்கூட்டத்தில் சங்கத்துக்கு 1973-74 ஆம் ஆண்டிற்கான புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தலைவராக விராமசாமி, செயலாளராக ஆர் வெங்கடராமன், துணைச்செயலாளராக பி ஏ நாராயணசாமி, பொருளாளராக எம் பழனியப்பன் ஆகியோரும் நிர்வாகக் குழு உறுப்பினர்களாக எஸ் பழனிச்சாமி, ஏ பி சதாசிவன், எஸ். சாமியப்பன், கே முருகேசன், ஆர் வரதராஜு ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# காங்கிரஸ் கட்சியில் ரௌடிகள்

## காங்கிரஸ் எம். எல். ஏ. பட்டியல் கொடுக்கிறார்

இந்திரா காங்கிரஸ், ஆட்சிக்கு வருவதற்காக, கடைந்தெடுத்த ரௌடிகளையெல்லாம் பணம் கொடுத்து காங்கிரஸில் சேர்த்து—மார்க்சிஸ்ட் கட்சி ஊழியர்களைப் படுகொலை புரிந்து வந்தார்கள்.

இப்படி ஊர் அறிந்த குண்டர்களெல்லாம மேற்கு வங்க ஆளும் காங்கிரசுக்குள் டேரா போட்டிருக்கிறார்கள்.

### பணத்திற்காக

பெருமுதலாளிகளும், ஜோட்தார்களும் இக்குண்டர்களுக்குப் பணம் கொடுத்து தொழிற்சங்கத் தலைவர்களைப் படுகொலை புரியவும்—தொழிற்சங்கங்களைக் கைப்பற்றவும், விவசாயிகளை நிலததை விட்டு வெளியேற்றவும பயன் படுத்தினார்கள்.

இவர்களுக்கு வெள்ளைக்குல்லா கொடுத்து, இளைஞர் காங்கிரஸ் தீவிர ஊழியர்கள் என்ற பட்டமும் கொடுத்து காங்கிரஸ் கட்சி பராமரித்து வந்தது. இவர்களது கொலைச்செயல்கள் அத்தனைக்கும் பாதுகாப்புக் கொடுத்து வந்தது மேற்கு வங்க அரசு. அதற்கு மத்திய அரசு இரகசிய இலாகாவிலிருந்தே திட்டமும வழி காட்டலும் இருந்து வருகிறது.

### வளர்த்த கடா

இந்த ரௌடிகள் தோலைக் கடித்து, துருத்தியைக் கடித்து, ஆட்டைக் கடித்து, மாட்டைக் கடித்து, இப்போது காசு கொடுக்க மறுக்கும் காங்கிரஸ் தலைவர்களையே கத்தியால் குத்த ஆரம்பித்துவிட்டார்கள்.

### ஒப்புதல்

இதனால் களேபரம் அதிகமாகி, மேற்குவங்க சட்டமன்றத்திலேயே கடந்த வாரம் காங்கிரஸ் உறுப்பினர் லட்சுமிகாந்த போஸ், "காங்கிரஸ் கட்சியில் 59 ரௌடிகள்" இருக்கிறார்கள் என்றும், அவர்கள் செய்த படுபாதகச் செயல்களையும் பட்டியல் போட்டு, உள்துறை அமைச்சர் சுப்ரதா முக்கர்ஜியிடம் மனுக் கொடுத்துள்ளளார்.

---

மற்றொரு காருகுடி

திருச்சேறையில்

# காங்கிரஸ் - தி. மு. க. மிராசுதார்கள் அட்டகாசம்

## ஒரு தெருவையே காலி செய்த கொடுமை

## போலீசாரும் உடந்தை

குடவாசல், மே. 9—

**மேலதஞ்சாவூரைச் சார்ந்த குடந்தை தாலுகா திருச்சேறையில், செங்கொடி இயக்கத்தை வளரவிடாமல் செய்ய தி மு க, காங்கிரஸ் மிராசுதார்கள் போலீஸ் உதவியுடன் சாலுவன் பேட்டை தெருவில் உள்ள 30 விவசாயத் தொழிலாளர் குடும்பங்களை அடித்து, வெளியேற்றிவிட்டு, சுமார் இரண்டாயிரம் ரூபாய் பெறுமான நெல், பாத்திரங்கள், உளுந்து, பயறு ஆகியவைகளை கொள்ளையடித்துச் சென்றுவிட்டார்கள்.**

குடந்தை தாலுகா நாச்சியார் கோவில் போலீஸ் சரகம் 152நிர் சாலுவன் பேட்டை கிராமத்திலிருக்கும் அரிசன விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் சுமார் 30பேர் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்கத்தில் உறுப்பினர்களாக இருக்கின்றனர்.

இவர்களை செங்கொடி சங்கத்தில் இருக்கவிடக்கூடாது என்று இஞ்சிக் கொல்லை ராதாகிருஷ்ணன் செட்டியார், குஞ்சு வன்னியர், பொன்னுசாமி தேவர், கணபதிவன்னியர் துரை வன்னியர், சாலுவன் பேட்டை நடேசன் ஆகியோர் தொடர்ந்து நிர்ப்பந்தித்தும், அடித்தும், வழக்குகள் தொடர்ந்தும் தொல்லைகள் பல கொடுத்தும் செங்கொடி சங்கத்தில் இருக்காதே என்று கூறி வந்தார்கள்.

ஆனல் விவசாயத் தொழிலாளர்கள் மறுத்து விட்டனர். மறுக்கவே, இவர்கள் விலகாமலிருப்பதன் காரணம் திருச்சேறையில் இருக்கும் டாக்டர் ஜி. துரைசாமிதான் என்றும், மேற்படி டாக்டரை ஊரை விட்டே விரட்டி விட்டால் இவர்கள் பணிந்து விடுவார்கள் என்றும் கருதினர். எனவே கடந்த 20-4-73-ல் குஞ்சு வன்னியர், பொன்னுசாமி தேவர், கணபதி வன்னியர், துரை வன்னியர், நடேசன் ஆகியோர் உள்பட சுமார் 60 பேர்கள் கத்தி, அரிவாள், சுலுக்கி, கம்பு போன்ற பயங்கர ஆயுதங்களுடன் டாக்டர் துரைசாமியின் வீட்டிற்கு வந்து அவரைத் தாக்க முயற்சிக்கும்போது, அவர் கதவை மூடிக்கொண்டு உள்ளே இருந்து விட்டார். அவர்கள் திருமபிய பிறகு, டாக்டர் துரைசாமி நாச்சியார் கோவில் காவல் நிலையத்திற்குச் சென்று தன்னை தாக்க வந்ததுபற்றி புகார் மனு கொடுத்திருக்கிறார். புகார் மனு கொடுத்து விட்டு திரும்பி ஊர் சென்றதும் போலீசில் புகார் செய்திருப்பது தெரிந்ததும், அந்த மிராசுதாரின் அடியாட்கள் ஏப். 24, 25 ஆகிய தேதிகளில் தினசரி திரண்டுவந்து தாக்க வந்திருக்கிறார்கள். மூன்றாவது நாள் (26—4——73) அன்று டாக்டர் வீட்டைச் சுற்றி முற்றுகையிட்டு விட்டார்கள் செய்தி அறிந்த சாலுவன் பேட்டையிலிள்ள விவசாயத் தொழிலாளர்கள் அவரை பாதுகாக்க ஓடிவந்தார்கள்.

இவர்களைக் கண்டதும் அடியாட்கள் அனைவரும விவசாயத் தொழிலாளர்களை விரட்டி அவர்களின தெருவில் புகுந்து தாக்கி ஊரை விட்டே விரட்டி விட்டு, சுமார் 20 குடும்பங்களில்இருந்தநெல், உளுந்து பயிறு மற்றும் தட்டுமுட்டு சாமான்கள், பணம், நகைகள் அனைத்தையும்— சுமார் 2000 ரூபாய்க்கும அதிகமான பொருள்களை கொள்ளையடித்துக் கொண்டு போய்விட்டார்கள்.

இது சம்பந்தமாக சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு தந்திகள் மூலம் தெரிவிக்கபட்டிருக்கிறது. இதன் பின்பு 27—4—73ல் திருவிடை மருதூர் போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் அவர்கள் ஸ்தலத்திற்கு வந்து எல்லாவற்றையும் பார்வையிட்டு மிராசுதார்களாலும், அவர்களின் அடியாட்களாலும் விரட்டியடிக்கப்பட்ட தொழிலாளர்களை அழைத்து வந்து ஊரில் இருக்கும்படியும், கொள்ளைபோன பொருள்களைப்பற்றி விபரம் தருமபடியும் கூறிவிட்டு, இரண்டு போலீஸாரை காவல் போட்டுவிட்டு சென்றார்.

சர்க்கிள் இன்ஸ்பெக்டர் சென்றவுடன் போலீசாரும் சென்று விட்டனர். இது பற்றி டாக்டர் துரைசாமி "தான் ஊரில் குடியிருக்கவோ. தொழில்நடத்தவோ முடியாது, எனது உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்புத் தரவேண்டும்" என்று கோரி 27-4-73-ல் மீண்டும் நாச்சியார் கோவில் காவல் நிலையத்தில் புகார் மனு ஒன்றை கொடுத்திருக்கிறார். பாதிக்கப்பட்ட விவசாயிகளின் சார்பில் வீரசாமி மகன் மகாலிங்கம், வண்டு மகன் தங்கய்யன் இருவரும் கொள்ளைபோன பொருள்கள் பற்றிய விமரமான பட்டியலையும், புகார் மனுவையும், நாச்சியார் கோவில் காவல் நிலையத்தில் கொடுத்துள்ளனர்.

### வி தொ. ச. செயலாளர் முறையீடு

தஞ்சை மாவட்ட வி. தொ. ச. செயலாளரும், மார்க்சிஸ்ட் கட்சியின் தஞ்சை மாவட்ட செயற்குழு உறுப்பினருமான தோழர் கோ. வீரையன் ஏப். 27-ந் தேதி இரவு நாச்சியார் கோவில் காவல் துறையினரிடததிலும், குடந்தையில் திருவிடைமருதூர் சர்க்கிள் இன்ஸ்பெக்டரிடமும் நேரிலும விபரமனைத்தையும்கூறி கொள்ளைபோன பொருள்கள் பற்றி விபரமான பட்டியலையும் கொடுத்துள்ளார். விவசாய தொழிலாளர் இயக்கத்தைச் சார்ந்த தொழிலாளர்களுக்குப பாதுகாப்புத் தரவேண்டுமென கோரினர். காவல் துறையினரும் பாதுகாப்பு தருவதாகக் கூறினர்கள். ஆனல்,

### மீண்டும் தாக்குதல்

தோழர் கோ. வீரய்யன் குடந்தையிலிருந்து திரும்பி நாச்சியார்கோவில் வருவதற்குள்அடியாட்கள்விவசாயத்தொழிலாளர்களை மீண்டும் அடித்து விரட்டினர்கள். தொழிலாளர்கள் அனைவரும் நாச்சியார் கோவிலுக்கு வந்துவிட்டார்கள். இது பற்றி காவல் நிலையத்தில் கூறிவிட்டு, அப்போதே தொலைபேசி முலம்சர்க்கிள் இன்ஸ்பெக்டருக்கும் தோழர் வீரையன் தகவல் கூறினர். உடன் கவனிப்பதாக கூறினர்கள். ஆனல், இதுவரையிலும் டாக்டரும், 30 விவசாயிகளும, விவசாய தொழிலாளர்களும் சாலுவன் பேட்டைக்குள் செல்ல முடியவில்லை. சென்றால் ரௌடிகள் தாக்குகிறார்கள்.

29—4—1973-ல் தஞ்சை மாவட்ட வி, தொ. ச, உறுப்பினரும். இஞ்சிக் கொல்லை ஊராட்சி மன்ற உறுப்பினருமானசேப்பான மகன் வீராச்சாமி தனது வீட்டிற்குச் செல்லுமபோது அவரை நடேசனும், மற்றவர்களும் வளைத்து அடித்திருக்கிறார்கள், அவர்கள் வீராசாமியை அடிக்கும் போது போலீசாரும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்,

அடித்துப் போட்டுவிட்டு சென்றபின்பு, சோ. வீராசாமி நாச்சியார் கோவில் காவல் நிலையத்திற்கு புகார் கொடுக்த வந்திருக்கிறார்கள். அங்கும் போலீசார் வீராசாமியை அடித்தும், நாச்சியார்கோவில் ஆஸ்பத்திரிக்கு 'மெமோ' போட்டு அனுப்பிவிட்டார்கள். போலீஸ் மெமோ எண். 50/ பொது) 73-29.473—428150. ஆனல் மருத்துவ மனையிலும அவருககு சிகிச்சை அளிக்க மறுத்துவிட்டார்கள். பிறகு குடவாசல் மருத்துவ மனையில் சிகிச்சை பெற்றார்.

### கோ. வீரய்யன் வேண்டுகோள்

தஞ்சை மாவட்ட தோழர் கோ. வீய்ரயன் குடந்தை காவல்துறை, துணை கண்காணிபபாளருக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளார்.

"இன்றுவரை எங்கள் சங்கத்தைச் சார்ந்தவர்கள் சாலுவன்பேட்டை கிராமத்தினுள் போக முடியவில்லை. அவர்களிள் பொருள்களை மேற்சண்ட நபர்கள் கொள்ளையடித்து போய் விட்டார்கள். தொழிலாளர்கள் அனைவரும் அகதிகள் போல் பல ஊர்களில் தங்கி இருக்கிறார்கள்.

நாச்சியார்கோவில் போலீசாரை பொறுத்தவரைராதாகிருஷ்ண செட்டியார். குஞ்சுவன்னியர், பொன்னுசாமிதேவர், கணபதி வன்னியர், துரைவன்னியர் நடேசன் இவர்கள் மீது நடவடிக்கை எடுக்கத் தயாராக இல்லை; எடுக்கவும் மாட்டாக்கள் எனவே,

எங்கள் இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் தாங்கள் குடியிருந்த இடத்திற்கு திரும்பி செல்லவும், இழந்த பொருள்களை மீட்டுத்தரவும் அவர்களின் உயிருக்கும் உடைமைகளுக்கும் பாதுகாப்பு தரவும், இவ்வளவு கொடுமைகளை புரிந்தவர்கள் மீது சட்டப்படிக்யான நடவடிக்கை எடுக்குமாறும் இவைகளுக்கு தாங்களே நேரில் வந்து தக்க நடவடிக்கை மேற் கொள்ளவும்வேண்டும்" என்று கேட்டுக்கொண்டுவிபரமான கடிதம் எழுதியுள்ளார்.

---

இந்திரா ஆட்சியிலே...

# ஆயுத போலீசுக்கு அளக்கப்படுவது ரூ1600கோடி

'ஜனநாயகத் தொட்டிலிலே' வளர்ந்த இந்திரா காந்தியின் ஆட்சியிலே மத்திய ஆயுத போலீஸ் படைகளுக்கு 1972—73-ம் ஆண்டில் கொட்டியளந்த பணம் ரூ. 1600 கோடி ஆகும்,

1972—73 பட்ஜெட்டின் போது மத்திய ஆயுதப் படைகளுக்கென ஒதுக்கப்பட்டதோ 1408 கோடி ரூபாய்.

ஆனல் உண்மையில் செலவழிக்கப்பட்டதோ 1600 கோடி ரூபாய். இந்த ஆண்டில் இது மேலும் அதிகரிக்கப்படும்.

ஒரு ஆண்டுக்கு முன்பு 1000 கோடியாக இருந்த இந்தத் தொகை திடீரென்று 1600 கோடியாக உயர்த்தப்பட்டதன் மர்மம் என்ன?

இதில்தான் மறைத்துள்ளது இந்திராகாந்தியின் "ஜனநாயக ஆட்சி முறை"யும், "சோஷலிச நடைமுறை"யும்.

தங்களது நியாயமான அடிப்படை உரிமைக்காகவும், உயர்ந்து வரும் விலைவாசிக்கேற்ப ஊதிய உயர்வுக்காகவும், வரிக் கொடுமைகளுக்கு எதிராகவும் —தொழிலாளர்களும், விவசாயிகளும், மத்திய—மாநில அரசு ஊழியர்களும, மாணவர்களும், ஆசிரியர்களும், நடுத்தர மக்களும், மற்ற பகுதி உழைப்பாளர்களும் போராடி வருகிறாகள்.

இவர்களது போராட்டங்கள் ஆண்டுதோறும் அதிகரித்துக்கொண்டும தீவிரமாகிக் கொண்டும் வருகின்றன.

இந்தப் போராட்டங்களின் தீவிரத்திற்கும் அதிகரிப்புக்கும் ஏற்ப தனது 'ஜனநாயக ஆட்சி முறை'யை இந்திராகாந்தி அமுலாக்க வேண்டாமா?

தனது ஜனநாயக ஆட்சி முறையைச் செவ்வனே நடததி முடிக்க மத்திய ரிசர்வ் போலீஸ், எல்லைப் பாதுகாப்புப்படை, மத்திய தொழில் பாதுகாப்புப் பராமரிப்புப் படை முதலியவற்றை ஏவிவிட வேண்டுமே.

அந்தப் போலீஸ் படையினர் தமது கடமையை ஒழுங்காகச் செய்துமுடிக்க வேண்டாமா? அவர்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கும் வகையில் நடந்துகொள்ள வேண்டாமா?

அதற்காகத்தான்,

மத்திய போலீஸ் படைகளுக்கான செலவுத் தொகை ஆண்டுதோறும அதிகரிக்கப்பட்டு வருகிறது.

திண்டுக்கல் வாக்காளர்களே!

உழைக்கும் மக்களின் உரிமைப் போராட்டங்களை நசுக்குவதற்கென்றே போலீஸ் படைகளை மத்தியில் குவிதது, கோடி கோடியாக பணத்தைக் கொட்டியளநது வரும் இந்த அடக்குமுறை ஆட்சியாளர்கள் வருகிறார்கள். இவர்களுக்குச் சரியான பாடம் புகட்டுவீர்!

---

# உணவு கோரி மக்கள் ஆர்ப்பாட்டம்

## போலீஸ் தடியடி

பெல்காம், மே. 9—

மைசூர் மாநிலத்திலுள்ள பெல்காம் மாவட்டத்தில் கடும் வறட்சி ஏற்பட்டுள்ளது. மக்கள் பட்டினியால் கூண்டோடு கைலாசம் போகும் நிலைமை ஏற்பட்டுள்ளது.

உணவுப் பொருள்கள் மூட்டை மூட்டையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தும்—மக்களுக்கு நியாய விலையில் அவைகள் கிடைக்கவில்லை.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்த மக்கள் பொங்கி யெழுந்தனர். பெல்காம் மாவட்டத்தின் முக்கிய நகரான உகார்கர்ட் நகரை நோக்கி ஆயிரக் கணக்கான மக்கள் படையெடுத்தனர்.

### மண்டைகள் பிளந்தன

ஒன்றுபட்ட மக்கள், கள்ள மார்க்கெட் வியாபாரிகளின கடைகள் முன்பு பெரும் ஆர்ப்பாட்டம் செய்தனர். நியாய விலையில் உணவுப் பண்டங்களை விநியோகிக்கக்கோரி கோஷமிட்டனர்.

மக்களின் ஆத்திரத்தைக் கண்ட கள்ள மார்க்கெட் வியாபாரிகள் போலீசை வரவழைத்தனர். போலீசார் தடியடிப் பிரயோகம் செய்து கூடி நின்ற மக்களின் மண்டைகளைப் பிளந்தனர்.

மேலும் வியாபாரிகள் வைத்திருந்த தானியத்தைக் கொள்ளையடிக்க முயற்சித்ததாக 58 பேர்களைப் போலீசார் கைது செய்துள்ளனர். அவர்களின் வீடுகளிலிருந்து 17 மூட்டை தானியங்களைக் கைப்பற்றியதாக பொய் வழக்கொன்றையும் போலீசார் ஜோடித்துள்ளனர். மக்கள் பட்டினியால் செத்தாலும் நியாய விலையில் உணவு கொடு என்று கேட்கக் கூடாது போலும்.

### காங்கிரசின் நீதி

மூடை மூடையாக தானியங்களைப் பதுக்கி வைத்திருந்த வியாபாரிகளின் மீது நடவடிக்கை எடுக்கத் தயங்கும் காங்கிரஸ் ஆட்சியாளர்கள்— அதை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்த மக்களின் மண்டைகளைப் பிளந்துள்ளனர். அத்தோடு நில்லாமல் அவர்களின்மீது கொள்ளையடித்ததாக வழக்குத் தொடுத்து கைதும் செய்துள்ளனர். இதுதான் காங்கிரசின் நீதி.

---

ஒரு பக்கம் நூல் தேக்கம். மறு பக்கம்

# வேலையிழந்து நிற்கும் நெசவாளர்கள்

மதுரை, மே. 9—

இன்று கைத் தொழிலில் பெரும் நெருக்கடி ஏற்பட்டுள்ளது. ஒரு புறம் நூல் கிடைக்கவில்லை என்ற காரணத்தினல் ஆயிரக் கணக்கான நெசவாளர் குடும்பங்கள் வறுமையில் வாடுகின்றன.

எனவே, நெசவாளர்கள் வீதிகளில் இறங்கி போராட்ட களத்தில் குதித்துள்ளனர்.

பஸ்கள் முன்பும், இரயில்கள் முன்பும் மறியல் முதலியபோராட்டங்கள்நடத்துகின்றனர். ஆயிரக்கணக்கில் கைதாகி வருகின்றனர்.

ஆனல், மறுபுறம் ஏராளமான நூல் கிட்டங்கிகளில் முடங்கிக் கிடக்கின்றன. அரசு அவற்றை எடுத்து விநியோகம் செய்யாமல் இருக்கின்றன.

### நூல் தேக்கம்

நூல் தேங்கிக் கிடப்பது குறித்து பம்பாயிலிருந்து வெளிவரும் "எக்னமிக் டைம்ஸ்" என்ற ஆங்கில நாளேடு கூறுவதாவது:—

தமிழ்நாட்டில் உள்ள மில்களில் ஏராளமான நூல் தேங்கிக்கிடக்கின்றன. மில்களுக்குச் சொந்தமான கிட்டங்கிகளில் தேங்கிக் கிடக்கும் நூலை அரசாங்கம் உடனடியாக கையில் எடுத்து விநியோகம் செய்யாவிட்டால், நூற்பாலைகள் முடங்கிவிடும்.

இவ்வாறு தேங்கிக் கிடக்கும் நூல் ஏறத்தாழ 30ஆயிரம் பேல் எனக் கணக்கிடப்படுகிறது. ஒரு மாதத்திற்கு மட்டும் இவ்வளவு நூல் (30 ஆயிரம் பேல்) உற்பத்தியாகின்றன, இதனுடைய மதிப்பு ரூ. 10 கோடியாகும். இந்த மில்கள் நூற்புஆலைகளின் கமிஷனரின் உத்திரவை எதிர்நோக்கியுள்ளன.

—எக்னமிக்டைம்ஸ் ஏப் 18

### நூல் பற்றுக்குறை

ஆனல் நூல்பற்றுக்குறையால் வேலையிழந்து நிற்கும் தொழிலாளர்களின் அவல நிலையைப் பற்றி "இந்தியன் எக்ஸ்பிரஸ்" இவ்வாறு கூறுகிறது.

தற்போது மகாராஷ்டிரத்திலுள்ள பிவன்டியில் சூழ்நிலை மிகவும் பயங்கரமாக உள்ளது. நூல் பற்றுக்குறையால் 20 ஆயிரம் பவர்லூம் தறிகளை பவர்லூம் முதலாளிகள் மூடியுள்ளனர். இதனல் 40 ஆயிரத்துக்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் வேலையிழந்துள்ளனர்.

—"இந்தியன் எக்ஸ்பிரஸ்" —ஏப். 25

ஒருபக்கம் நூல் தேக்கம்; மறுபக்கம் நூல் கிடைக்காமல் வேலையிழந்து நிற்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள்.

இந்த அவலநிலை மராட்டியத்தில் மட்டுமல்ல தமிழ் நாட்டிலும் பிறமாநிலங்களிலும் உண்டு.

### திண்டுக்கல் வாக்காளர்களே !

இந்த லட்சணத்தில் மத்திய—மாநில ஆட்சியாளர்கள் திண்டுக்கல்லில் தங்களுக்கே ஓட்டுப் போடுங்கள் என்று வெட்கமின்றி சுற்றிச் சுற்றி வருகிறார்கள். திண்டுக்கல் தொகுதியிலுள்ள கைநெசவாளர்களே! வாக்காளப் பெருமக்களே!

வேலையிழந்து தெருவில் நிற்கும்நெசவாளர்களைப்பற்றியோ-பட்டினியில்உழலும் அவர்களது பெண்டு—பிள்ளைகளைப் பற்றியோ சிறிதும் கவலைப்படாதஇண்டிக்கேட் காங்கிரசாரும் தி மு கழகத்தினரும், சிண்டிகேட் காங்கிரசாரும் வாக்கு மட்டும் கேட்டுவருகிறார்கள்.

இவர்களுக்குச் சரியான பாடம் கறபிக்க இதுதான் சந்தர்ப்பம் நழுவவிடாதீர்!

—மறவாதீர்—

"இரட்டை இலைச்சின்னம்"

---

# போட்டானே போட்டானே ஊமத்தை விதை கலந்த உணவைப் போட்டானே

மக்களுக்கு வினியோகிப்பதற்காக இந்திய அரசாங்கம வினியோகிக்கும் உணவு

— ஊமத்தை விதை கலந்த மக்காச் சோளம்

— இருப்புத் தூள் கலந்த அரிசி

— இரும்புத் தூள் கலந்த கோதுமை

ஊமத்தை விதை கலந்த மக்காச்சோளம. மனிதன் சாப்பிடுவதற்கான உணவல்ல. ஆடு, மாடுகளுக்குப் போடுவதற்காக வைக்கப்பட்டிருந்த உணவு.

இவை நம்நாட்டில் மக்கள் சாப்பிடுவதற்காக வினியோகிப்பதற்கு யார் பொறுப்பு?

இந்தக் கொலை பாதகத்தைச் செய்தது தாங்கள் அல்ல என்கின்றது அமெரிக்க அரசாங்கம்.

### அமெரிக்க அதிகாரி அறிவிப்பு

"எங்களிடமிருந்து வாங்கிய மைலோ (மக்காச் சோளம்) இரண்டாம் தரமானது என்பதும், அது மக்கள் உட்கொள்வதற்கு லாயக்கற்றது என்பதும், கால்நடைகளுக்குத்தான் தீனியாகப் பயன்படும் என்பதும் இந்திய ஆட்சியாளர்களுக்குத் தெரியும்.

இப்படிப்பட்ட மக்காச் சோளத்தை மக்களுக்கு உணவாக விநியோகிக்கிறார்களென்றல், அது அவர்களது (இந்திய ஆட்சியாளர்களது) சொந்த விஷயம். அவர்கள் விலைக்கு வாங்கியுள்ளனர். அதை எப்படி வேண்டுமானலும் பயன்படுத்திக் கொள்வது அவர்களது விருப்பம்."

அமெரிக்க அரசாங்கத்தின் முக்கிய அதிகாரி ஒருவர்தான் இவ்வாறு கூறியுள்ளார்.

—'இந்தியன் எக்ஸ்பிரஸ்' 12—3—73.

---

ஒரிசாவில்

# வலது கம்யூனிஸ்டு கட்சியில் தகராறு

## மாநில செயலாளர் தூக்கி எறியப்பட்டார்

புவனேஸ்வரம், மே 8—

ஒரிசாவில் வலது கம்யூனிஸ்ட்கட்சிக்குள்ஏற்பட்ட உள்தகராறு அக்கட்சியின் பொதுச் செயலாளரே நேரில் வந்தும் தீர்க்க முடியாத அளவுக்கு மீறிப் போய்விட்டது.

ஒரிசாவில் கட்சி அமைப்பே இயங்க முடியவில்லை. மாநில செயற்குழுவுக்குக் கூட எந்த மதிப்பும இல்லை.

ஒவ்வொரு தலைவரும் ஒவ்வொரு வழியில் சென்று கொண்டிருப்பதால் கட்சிக்குள் பெருங் குழப்பம் ஏற்பட்டுள்ளது.

இந்தியாவில் பூரி என்ற இடத்தில் கட்சியின் மாநிலக்குக் கூட்டம் கூட்டப்பட்டது.

சச்சரவைதீர்த்து வைப்பதற்கு கட்சியின் பொதுச் செயலாளர் ராஜேஸ்வர ராவ் வந்திருந்தார்.

இந்தக்கூட்டத்தில் மாநில செயலாளராக இருந்த டி. சி மகாந்தி அப்பதவியிலிருந்து தூக்கி எறியப்பட்டார். அவருக்குப் பதில் சதானந்தாமகாந்திமாநிலச் செயலாளராக ஆக்கப்பட்டார், செயற்குழுவும் மாற்றி அமைக்கப்பட்டது.

அடுத்த மாநில மாநாடு கூடும் வரை மாநிலச் செயலாளராகவும், செயற்குழு உறுப்பினர்களாகவும் இருப்பதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் இடையிலேயே தூக்கி எறியப்படும் அளவுக்கு கட்சிக்குள் தகராறு முற்றிவிட்டது.

இந்த வெட்கக் கேட்டை மூடி மறைப்பதற்காக "ஒரு நபருக்கு ஒரு பதவி" என்ற கோட்பாட்டைத் தாங்கள் பின்பற்றுவதாகவும் டி. சி மகாந்திமாநில ஏஐடியூசி. செயலாளராக இருப்பதால் தான், இப்போது கட்சியின் மாநில செயலாளர் பதவியிலிருந்து நீக்கப்பட்டுள்ளார் என்றும் ராஜேஸ்வர ராவ் விளக்கம் தந்தார்.

டி. சி. மகாந்தியை செயலாளராக தேர்ந்தெடுத்த போது இந்தக் கோட்பாடு ஏன் நினைவுக்கு வரவில்லை என்பதற்கு ராஜேஸ்வரராவ் விளக்கம் தரவில்லை.

கட்சிக்குள் தகராறு வந்ததும்தான் இந்தக் கோட்பாட்டின் பெருமை அவர்களுக்குத் தெரிந்தது போலும்.

---

# குளச்சலில் பொதுக்கூட்டம்

குளச்சல், மே 10—

குமரிமாவட்டம் குளச்சலில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டம் மே 5-ந் தேதி நடந்தது. தோழர் பி. சாகுல் அமீது தலைமை வகித்தார்.

மணல் ஆலைத் தொழிலாளர் வேலை நிறுத்தம், கைநெசவுத் தொழிலாளர்களின் போராட்டம், இன்றைய அரசியல் நிலைமை ஆகியவை குறித்தும், எருமை போலீஸ் இன்ஸ்பெக்டர் தொழிலாளர்கள் மீது நடததிவரும் அடக்குமுறையைக் கண்டித்தும் தோழர்கள் ஏ நடராஜன், என் அச்சுதன், எஸ். குமரேசன் ஆகியோர் பேசினர்.

# பஞ்சாப் நகரங்களில் விலைவாசியை எதிர்த்து ஆர்ப்பாட்டம்

அமிர்தசரஸ், மே. 8— பஞ்சாபில் உள்ள பல ஜில்லாக்களில் அன்றுடத் தேவைக்கு அவசியமான பொருட்கள்—வனஸ்பதி, மண்ணெண்ணெய் போன்றவைகள்—பதுக்கல்காரர்களால் பதுக்கப்பட்டு கிடைககாமல் போனதால், மக்களிடையே கொந்தளிப்பு உச்ச கட்டத்தை அடைந்தது.

அமிர்தசார் ஜில்லாவில் உள்ள டாரான்டரன் என்னும் நகரில் வனஸ்பதி, மண்ணெண்ணை போன்ற அன்ருட உபயோகப் பொருட்கள் மார்க்கெட்டிலிருந்து மொத்தமாக பதுக்கப்பட்டது. இதனல். வனஸ்பதி விற்பனையாளர்களுக்கும், வாங்குவோருக்குமிடையே கடந்த சனிக்கிழமை பெரும் மோதல் ஏற்பட்டு விட்டது.

விற்பனையாளரின் கடையின் முன்னல் திரண்டு வந்த வாடிக்கையாளர்கள் வனஸ்பதியை பதுக்கிவிட்டதாக குற்றம் சாட்டினர். இவ்வாறு வார்த்தைகள் அளவில் வனஸ்பதியை நியாயமான விலைக்கு வாங்க வாடிக்கையாளர்கள் முயற்சித்துக் கொண்டிருந்தது முடிவில் மோதலாகிவிட்டது.

பதுக்கல் வியாபாரிகளிடமிருந்து பதுக்கல் பொருட்களை வெளியேற்றி ஜனங்கள் கைப்பற்றியதாகவும் செய்திகள் கூறுகின்றன. அமிர்தசாரின் பல பகுதிகளிலும், சபான்பஜார் பகுதிகளிலும் பதுக்கல்காரர்களை எதிர்த்து நடவடிக்கைகள் நடந்தன.

கடந்த 15 நாட்களில் வனஸ்பதி டின் ஒன்றுக்கு ரூ. 98-லிருந்து ரூ. 150-க்கு கூடிவிட்டதாம். சிறு கடை வியாபாரிகள் தங்களுக்கு வனஸ்பதி கிடைககாமல் வனஸ்பதி இல்லை என்று அறிவிப்பு பலகை போட்டுள்ளார்கள்.

## மதுரையில்

# நெசவாளர் போராட்டத்தை உடைக்க தி. மு. க. சதி

## தொழிலாளர்கள் மீது ரவுடிகள் தாக்குதல்

மதுரை, மே. 10— கைத்தறி நெசவுத் தொழிலாளியின் பெயருக்கு நூல் வினியோகக்கார்டும், தேவைக்கேற்ற நூலும், வேலையிழந்த நாட்களுக்கு சம்பளமும், இது போன்ற பல கோரிக்கைகளையும் முன்வைத்து கடந்த ஐந்தாறுநாட்களாககைநெசவு தொழிலாளர்கள் ஒன்றுபட்டுப்போராடிவரும்காட்சியை மதுரை செல்லூரில் பார்த்து வருகிருேம். இத்துடன், மாஸ்டர் வீவர்கள் காலவரையின்றி கம்பெனியை மூடிப் போட்டுள்ளதை கண்டித்தும், வேலை நிறுத்தம் செய்து போராடி வருகிருர்கள்-

### தி மு க கருங்காலிகள்

இந்தப் போராட்டத்தை உடைக்க, மாஸ்டர் வீவர்கள்—ஆள்பிடித்தார்கள். அவர்களின் பணத்தைப்பெற்றுக் கொண்டு தி. மு. க. ஆட்கள் கருங்காலி வேலை செய்ய முன் வந்தார்கள்.

தி. மு. க. தொழிற்சங்கச் செயலாளர் மா, நடராசன் என்பவர் தன்னுடைய கூட்டாளிகளை கூட்டிக் கொண்டு வேலைநிறுத்தத்தை உடைக்கும் நோக்கத்துடன், சில கம்பெனிகளைத் திறக்கச் செய்து வேலை செய்தார்கள்.

### சொல்லிப் பார்த்தார்கள்

இதைக்கண்ட ஆயிரக் கணக்கான தொழிலாளர்களுக்கும் ஆத்திரம் மேலிட்டது. எதற்கும் சொல்லிப் பார்ப்போமென்று திரண்டு சென்று, "இன்னும் போராட்டம் முடியவில்லை. அதற்குமுன் வேலை செய்வது சரியல்ல. பொதுவான பிரச்னைகளில் எல்லா தொழிலாளர்களுடனும் நீங்களும் நிற்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள்

### பாய்ந்து தாக்கினர்

வேலை செய்வதை ஆட்சேபிக்க வருகிறவர்களைத் தாக்குவதற்கு தி. மு. க. வைச் சேர்ந்த நடராசன் கூட்டாளிகள் திட்டம் போட்டிருந்தார்கள். இந்தத் திட்டம பற்றி தெரியாத தொழிலாளர்கள் மீது, தாங்கள் தயாராக வைத்திருந்த கத்தி, தடி, கல் ஆகியவற்ருல் தாக்குதல் நடத்தினுர்கள்.

இதனல் அநேக தொழிலாளர்களுக்கு காயம் ஏற்பட்டது. ஒரு தொழிலாளிக்கு கத்திக் குத்தும் விழுந்தது.

### கருங்காலிகளுக்கு மக்கள் தந்த பூசை

யாதொரு ஆத்திர மூட்டலும் இல்லாமலிருக்கும் போதே, ஊர் திரண்ட ஒற்றுமை உணர்வையும் மதிக்காமல்-கோரிக்கையின் நியாயத்தையும் மதிக்காமல் — கத்திக்குத்திலும், கம்பமயிலும், கல்வீச்சிலும் இறங்கியதால், ஆத்திரமுற்ற தொழிலாளிகளும் தொழிலாளிப் பெண்களும் அந்தக் கருங்காலிகளைத் தெருவில் இழுத்து வந்து முறைப்படி கொடுக்க வேண்டிய பூசைகளைக் கொடுதது புத்தி புகட்டினுர்கள்.

இதற்குள் போலீஸ்வந்து கருங்காலிகள் மீது நடவடிக்கை எடுப்பதாக மக்களிடம் வாக்குறுதி அளித்து விட்டு—தி. மு. க. வின் வட்டக்கழகத்துக்குள் அழைத்துச்சென்று காவல் புரிந்தனர்.

## குமரி மாவட்ட மில் தொழிலாளர் சங்க நிர்வாகிகள் தேர்வு

நாகர்கோவில், மே. 1— குமரி மாவட்ட தொழிலாளர் சங்கத்தின் 13 வது ஆண்டு விழாவும், மேதின விழாவும், மே முதல் நாள் சங்க காம்பவுன்டினுள் அமைக்கப்பட்ட விசேஷ பந்தலில் நடைபெற்றது.

தோழர்கள் ஜே. ஹேமசந்திரன், பி. கிருஷ்ணன் ஆகியோர் சொற்பொழிவாற்றியபின், புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

தோழர் ஹேமசந்திரன் தலைவராகவும், தோழர் பி. அந்தோணி உதவி தலைவராகவும், தோழர். பி. திவாகரன் பொதுச் செயலாளராகவும், தோழர் எஸ். ஜார்ஜ் உதவிச் செயலாளராகவும தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

## மதுரை மாவட்ட என். ஜி. ஓ சங்கம் அறிக்கை

மதுரை, மே. 8— மதுரை மாவட்ட என். ஜி. ஓ.க்கள் சங்கத்தின் தலைவர் திரு எப். எம். குத்புதீன் கீழ்வரும் அறிக்கையினை விடுத்துள்ளார்:—

என். ஜி. ஓ. சங்க மதுரை மாநகராட்சிக் கிளையின் சார்பாக 11-5-73ந் தேதியன்று, மதுரையில் அரசு ஊழியர்கள் கூட்டம் நடத்தப் போவதாகவும், அதில் திரு சிவ. இளங்கோ பேசப் போவதாகவும் விளம்பரம் செய்யப்பட்டுள்ளது.

மதுரை மாநகராட்சிக் கிளையென்று என்.ஜி.ஓ.யூனியனில் எதுவும் கிடையாது, 30-4-73ம் தேதிக்குள் தேர்தல் நடத்த முடியாது, சிவ. இளங்கோ கும்பல்தங்களைத் தாங்களே தலைவர்களென்று தங்களது சொந்தச் செலவிலேயே போஸ்டர்கள் அடித்து சுய விளம்பரம் செய்து கொள்கிருர்கள்.''

இவர்களுக்கும், முறைப்படி தேர்தல் நடத்தி இயங்கி வரும் மதுரை மாவட்ட என். ஜி. ஓ. யூனியனுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லையென மதுரை மாவட்ட அரசு ஊழியர்களுக்குத் தெரியப்படுத்திக் கொள்கிருேம்.

இவ்வாறு தமது அறிக்கையில்அவர்கூறியுள்ளார்

## காங்கிரசாட்சியிலே..!

இந்தியாவில் உள்ள மொத்த மக்கட் தொகை 55 கோடிப்பேர்! இவர்களில்,

32 கோடியே 60 இலட்சம் பேர் சத்துணவுக் குறைவினல் ஏற்படும் நோய்களில் பாதிக்கப் பட்டுள்ளனர்.

இவர்களில் 1 வயது முதல் 6 வயது வரைக்கும் உள்ள குழந்தைகள் 8 கோடியே 60 லட்சம் பேர் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர்.

ஒவ்வொரு ஆண்டும், 5 வயதுக்கும் உட்பட்ட 40 சதவீதம் குழந்தைகள் சத்துணவின்மையால் மடிந்து கொண்டிருக்கின்றன.

வைட்டமின் 'ஏ' குறைவினல் 2 கோடியே 50 இலட்சம் குழந்தைகள் கண்பார்வை இழந்து வருகிகின்றன.

85 ஆயிரம் கர்ப்பிணிததாய் மார்கள், பிரசவ காலத்தின்போது போதிய சத்துணவு இன்மையால் மடிகின்றனர்.

# பட்டினியால் மூவர் சாவு

## ஜனதிபதி ஆட்சியுள்ள ஆந்திராவில்

ஐதராபாத். மே. 10— ஆந்திர மாநிலத்தில் 3 பேர் உண்ண உணவின்றி பட்டினியால் இறந்துள்ளனர்.

உலகத் தொழிலாளர் தினமான மேதினத்தன்று இந்த ஏழை உழைப்பாளர்கள் பட்டினியால் இறந்துள்ளதாக ஆந்திர சட்ட மன்ற காங்கிரஸ் எம். எல். ஏ. வான பி. கோவர்தன் ரெட்டியே கூறியுள்ளார்.

இலம்பாடி என்பவரும் அவருடைய மனைவியும் பட்டினியால் இறந்துள்ளனர். தாங்கள் ஜீவிக்க எந்தவித பிழைப்பும கிடைக்காததால் அவர்கள் உயிர் விட்டுள்ளனர்.

பட்டினி நிலையைப் போக்க வேலை தேடிச் சென்று விட்டு திரும்பி வரும்முன் கிராமத்திலுள்ள அவர் மனைவி பசிபொறுக்காமல் இறந்து விட்டதாக அந்த எல். எல். ஏ. கூறினுர்.

மூன்ருவதாக செத்தநபர் யார் என்று அறிவிக்கப் படவில்லை.

இங்கு மட்டுமல்ல, நல் கொண்டா ஜில்லா முழுவதும் வறுமையின் கோரப் பிடியில் சிக்கும் அபாயம் உள்ளதாக அஞ்சப்படுகிறது.

## ஏகபோக முதலாளிகளையும் நிலப்பிரபுக்களையும் ஒடுக்காமல்

# வேலையின்மையை தீர்க்க முடியுமா?

கிராமப்புறவேலை வாய்ப்பு திட்டம் சமபந்தமாக இந்த ஆண்டு ரூ 50 கோடி செலவழிக்கப்போவதாக மத்திய சர்க்கார் தம்பட்டம் அடித்துக்கொள்கிறது. ஆனல், கடந்த கால அனுபவங்களைக்கொண்டு பார்த்தால் இவர்கள் திட்டம் எதை செயலாக்கும் என்பது தெளிவு இல்லாததாக இருக்கிறது.

உதாரணமாக, 1972-73-ம் வருடத்தின் வேலை அறிக்கை 86 கோடியே 52 லட்சம் ரூபாய் செலவழித்து 8 கோடியே 63 லட்சம் மனித வேலை நாட்கள் உருவாக்கப்பட்டன என்று கூறுகிறது. இது ஒரு முக்கியமான திட்டத்தை மிகவும் தெளிவற்ற முறையில் தெரிவிப்பதாக அமைகிறது.

ஒரு நபர் சராசரியாக ஒரு ஆண்டில் 200 நாட்கள் வேலை செய்ததாகக் கொள்வேமேயானல், இத்திட்டத்தினல் பயனடைந்தோர் 4 லட்சத்து 30 ஆயிரம் பேர்களே. ஆனல், வேலை வேண்டுவோரின் எண்ணிக்கை கோடிக் கணக்கில் உள்ளது. அவர்களின் கணக்குப்படி ஒரு நாளுக்கு ஒரு நபருக்கான செலவு ரூ 3.07 ஆகும்.

செயல்படுத்துவதற்கான செலவு, மேற்பார்வைச் செலவு இவைகளை யெல்லாம கணக்கில் கொண்டால் ஒருவரின் சம்பளம் ரூ. 2.50 லிருந்து ரூ 3-க்குள்ளாக உள்ளது. ஏறிவரும் விலைவாசிக்கு இச்சமபளம் மிகக் குறைவானது. கிராமம் புறச்சாலைகள் போடுதல், நிலச் செப்பனிடுதல். காடு வளர்த்தல் போன்ற வேலைகள் செய்யப்பட்டுள்ளன. ஆனல். இந்தத் துறை பற்றிய ஒரு கருத்தரங்கில் குறிப்பிட்டது போல், "மொத்த செலவில் 70 லிருந்து 80 சதவீதம வரை கிராமப்புறசாலைகளுக்கே செலவிடபட்டுள்ளன.

—(எகனுமிக் டைம்ஸ் பிப். 26)

### அமைச்சர்களின் கருத்து வேறுபாடு

எனவே கூலி விகிதம், வேலை வகை போன்ற கண்ணேட்டங்களில் பார்க்குமிடத்து இத்திட்டம் தோல்விகண்டதும்சோர்வு உடையதாகவும் உள்ளது. கிராமப் பகுதியில் வேலையற்ரேருரின் ஒரு மிகச் சிறிய பகுதியே இதனல் பயன் அடைந்துள்ளனர். ஆனல் மத்திய உணவு அமைச்சர் திரு. பக்ருதீன் அலிஅகமது தமது அறிக்கையில் "இந்த கிராமப்புற வேலை வாய்ப்புக்காண திட்டம் முழுமையாக நிறைவேற்றப்படும் பட்சத்தில், மக்களின் வாழ்க்கைத் தரத்தில் ஒரு புரட்சிகரமான மாற்றம் உண்டாகும்'' என்று பீற்றிக் கொள்கிருர். ஆனல், இதற்கு மாருக ஜகஜீவன்ராம் ராஞ்சியில் ஒரு நிகழ்ச்சியில் பேசும் போது, இந்த வேலை வாய்ப்புத்திட்டத்தின் நன்மைகள் பெரும்பாலும் தகுதியற்ரேருக்கே சென்றுள்ளன. ஏனெனில், நிர்வாகத்துறையினரின் முடிவுகள் சமூகத்தில் செல்வாக்குள்ள பகுதியினருக்கே சாதகமாக உள்ளன'' என்று அடித்துக் கூறியுள்ளார்.

இந்த நகர்ப்புற, கிராமப்புற வேலை வாய்ப்புத் திட்டங்கள் தொடர்பாக கவனிக்கப்பட வேண்டிய அம்சம் யாதெனில், நமது நாட்டில் மென்மேலும் பெருகி வரும் நிலம் உள்ளிட்ட உற்பத்தி சக்திகளின் குவியலுக் எதிராக ஏற்படும் சவால்கள் அனைத்தும் நாசூக்காகவும், கவனமாகவும் தவிர்க்கப்பட்டுவருகின்றன. திட்டங்கள் எல்லாம தற்போதைய சொத்துடைமை உறவுகளுக்கு சேவை செய்யவே உருவாக்கப்படுகின்றன.

எனினும், பொருளாதார முன்னேற்ற மின்மைக்கும் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிக்கும் உற்பத்தி சக்திகள் சிலர் கட்டுப்பாட்டின் கீழ் குவிந்துகிடப்பதே. தொழிற்சாலைகள்,நிலங்கள் இவைகள் சம்மந்தப்பட்ட ஏனைய சொத்துக்கள்இவைகளின் பெருமபகுதி மக்களின் சிறுபகுதியினரால் ஏகபோகமாக கொள்ளப் பட்டதால் பெரும் பகுதி மக்கள் உற்பத்திகளின் மீது நியாயமான உரிமையைகடைப்பிடிக்கமுடியவில்லை.

### பெரு முதலாளிகளின் ஆதிக்கம்

அதனல் ஒரு முறையான—நியாயமான ஒரு வாழ்க்கையை அடைய முடியவில்லை, சக்திமிக்க பெரு முதலாளிகள், தொழிலுக்கான மூலப் பொருட்களையும், உற்பத்தி சக்திகளையும் இறுக்கிப் பிடித்துக் கொள்வதால் சிறிய அளவில் சொத்துக் கொண்டவர்கள் கூட பொதுவாக தங்களது நிலையை மேற்கொண்டு அபிவிருத்தி செய்ய வில்லை.

பொருளாதாரத்தில் ஏகபோகவாதிகள் செலவாக்கை உடைத்தெரியாவிட்டால் ஒரு விரிவான வேலை வாய்ப்பு அதிகரிப்பு என்பது சாத்தியமில்லை.

ஆனல் காங்கிரஸ் ஆட்சி தொழில் ஏகபோக வாதிகளையும், கிராமபுறத்திலுள்ள நில மன்னர்களையும் அழிக்க விரும்பவில்லை. இதை மறைக்கவே வேலைக்கான ஸ்பெஷல் திட்டம் என்பவைகளை காட்டுகின்றன.

### ஸ்பெஷல் திட்டம் எதற்காக?

அரசாங்கத்தின் திட்டங்களே பரவலான வேலை வாய்ப்புகளை அதிகரிக்குமானல் வேலை வாய்ப்புக்காக ஸ்பெஷல் திட்டங்களை எதற்காக போட வேண்டும்?

இந்த சர்க்கார் உடைமை வர்க்கங்களுக்காகவே செயல்படுகிறது. எனவே இந்த சர்க்காரின் திட்டங்களால் வேகமான, சமத்துவமான பொருளாதார வளர்ச்சி இருக்க முடியாது என்பது இந்த அரசாங்கத்துக்கே தெரியும். அதனலேயே பித்தலாட்டத்தனமான முறையில், வேலை வாய்ப்பு அதிகரிப்புக்கான தனித் திட்டத்தை ஏற்படுத்துகிறது.

### வேலையின்மையை போக்கமுடியாது

இத்திட்டம் சில பேருக்கு வேலை தரலாம். எப்படிப்பட்டவாகளுக்கு? மத்திய அமைச்சர் ஜகஜீவன்ராம் கூறியது போல அது செலவாக்குப் படைத்த பகுதியினருக்கே போய்ச் சேரும்.

வேலையில்லாத மற்றவர்கள் வேலை தேடி வீதியில் அலைய வேண்டியதுதான், எனவே. சர்க்காரால் உருவாக்கப்பட்ட வேலை வாய்ப்புக்கான தனித் திட்டம் என்ற பித்தலாட்டத் திட்டம் அவர்கள் போட்ட திட்டப்படி நூற்றுக்கு நூறு செயல்பட்டாலும் வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சினையை இந்த அரசாங்கம் தீர்க்கவே முடியாது.

—பீப்பிள்ஸ் டெமாகிரசி

# மே தினம்

சென்னை, மே. 9— தொழிலாளர் வர்க்கத்தின் ஒப்பற்ற தினமான மே தினத்தையொட்டி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வடபழனி கிளையின் சார்பாக,சாலிகிராமம்பகுதிகளில் கட்சிக் கொடிகள் 5 இடங்களிலும், கிளை அலுவலகத்திலும் ஏற்றப்பட்டு இனிப்பு வழங்கப் பட்டது.

சாலிகிராமம் பகுதியிலுள்ள ஜி. ஏ. சி. தொழிலகத்தின் சார்பாக சி. ஐ. டி. யூ. கொடியேற்று விழாவில் தோழர்கள் எஸ். நடராஜன் (கிளைச்செயலாளர்), பத்மநாபன் ஆகியோர் மேதின சிறப்பைப் பற்றி பேசிய பிறகு தோழர் செல்லப்பன் பலத்த கரகோஷத்திற்கிடையே கொடியேற்றினர். இனிப்பு வழங்கப் பட்டது.

பல்லவா போக்குவரத்து வடபழனி பணிமனையில் சி. ஐ. டி. யூ. கொடியேற்றி இனிப்பு வழங்கப்பட்டது.

கொடியேற்று விழாவிற்கு ஏராளமான தொழிலாளர்களும், கட்சி ஊழியர்களும், கட்சி ஆதரவாளர்களும் கலந்து கொண்டு மே தினம் கொண்டாடப் பட்டது.

### தஞ்சை வட்டத்தில்

தஞ்சை வட்டம் மே. 6-ல் முல்லக்குடி கிராமத்தில் மே தின விழாப் பொதுக் கூட்டம் நிகழ்ந்தது. கூட்டம் தொடங்குவதற்கு முன்னல் மாவட்டக் குழு உறுப்பினர் தோழர் என. வெங்கிடாசலம் செங்கொடியை ஏற்றி வைத்தார்.

பொதுக்கூட்டத்திற்கு தோழர் ஜெயபால் தலைமை தாங்கினுர். தோழர் என். வெங்கிடாசலம மேதினம் பற்றியும், காருகுடி நிகழ்ச்சியில் எதிர்ககட்சிகளின் நிலைபற்றியும், திண்டுக்கல் தேர்தல் பற்றியும் விளக்கிப் பேசினுர். மேலும தோழர்கள் வெ. மணியரசன், சி. அறிவுறுவோன், ச. சுப்பையன், க. பழனிமாணிக்கம், தோழர் இலக்குமி ஆகியோர் பேசினுர்கள்.

கூட்டம் தொடங்குவதற்கு முன் செல்வம் இயக்கப் பாடல்கள் பாடி எல்லோரையும் மகிழ்வித்தார்.

மேதினததை முன்னிட்டு திருக்காட்டுப்பள்ளி,கண்டமங்கலம், வரகூர், செங்கிப்பட்டி, அமமையகரம இராயமுண்டாம்பட்டி, வெண்டயம்பட்டி, புதுத்தெரு, செந்தலை, ஆகிய ஊர்களில் செங்கொடிகள் ஏற்றப் பட்டன.

### கட்சி வளர்ச்சி நிதி

மேதின வாரத்தை முன்னிட்டு, மே 6,7 தேதிகளில் தஞ்சை வட்ட கட்சி வளர்ச்சி நிதிக்காக தோழர்கள் கே. ரெத்தினம், ச. சுப்பையன், சி. அறிவுறுவோன், வெ மணியரசன். கே. பழனிமாணிக்கம், இடும்பையன் ஆகியோர் தலைமையில் வசூலில் ஈடுபட்ட குழுவினர் ரூ 242 வசூல் செய்தனர்.

### தாராபுரத்தில்

கோவை மாவட்டம்தாராபுரத்தில் மேதின விழா மே முதல் தேதியன்று சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

அன்று காலை 8 மணியளவில் கூட்டுறவு மில் கேட் முன்பு கட்சியின் தாலுகா செயலாளர் தோழர் டி. பி. முத்துச்சாமி செங்கொடியினை ஏற்றி வைத்தார், மேதின வரலாறு குறித்துவிரிவாகப் பேசினுர்.

பின்பு ஊர்வலமாகச் சென்று சிஐடியூ சங்க அலுவலகத்திலும் காளிபாளையம், மேட்டுவலசு முதலிய ஊர்களிலும், நகர சபை முன்பும், வடதாரை மைதானத்திலும் செங்கொடிகள் ஏற்றப்பட்டன.

### உடன்குடியில்

உடன் குடியில் மே 6-ந் தேதியன்று மேதின ஊர்வலமும்,பொதுக் கூட்டமும சிறப்பாக நடந்தன.

மாலை 5 மணிக்கு கட்சி அலுவலகத்திலிருந்து தோழர் கம்சா முகைதீன் தலைமையில் மேளவாத்தியங்கள் முழங்க ஊர்வலம புறப்பட்டது. கரக ஆட்டமும், சிலம்பாட்டமும் பொய்க்கால் குதிரையாட்டமும் வால்வீச்சு விளையாட்டும் ஜமாய்க்க ஊர்வலம பஜாா பாரதி திடலை அடைந்தது.

அங்கு,தோழர் பா. சோமசுந்தரம் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் மாணவர் ஜெ. பிரமுத்து, பே பி எஸ். விஜய பூபதி, எம் சுப்பையா, எஸ். பூவலிங்கம, ஆதி, டி. கே. சுவாமிதாஸ் ஆகியோர் பேசினர்.

சேலம் மாவட்ட வங்கி ஊழியர் சங்கத்தின் எட்டாவது மாநாடும், மேதினமும் மே முதல் நாளன்று விமரிசையாக நடந்தது, தோழர் என். சுப்ரமணியம் சங்கக் கொடியை ஏற்றிவைத்த பின், சென்டல் வங்கி ஊழியர்கள் சங்கத்தைச்சேர்ந்த சி.எஸ். சுப்ரமணியம் தொழிலாளர் இயக்கப் பாடல்களைப் பாடினுர்.

சங்கத்தலைவர் என். சண்முகம வரவேற்புரை நிகழத்திய பின் டி. ஞானையா, ஜி. கபாலீஸ்வரன் ஆகியோர் வாழ்த்திப் பேசினர். வி. கிருஷ்ணமூர்த்தி, செயலாளர் அறிக்கையும் எஸ். அச்சுதக்குட்டி வரவு-செலவு கணக்குகளையும் சமர்ப்பித்தனர்.

பல தீர்மானங்கள் நிறைவேறறப்பட்டன. பின்னர் புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கபபட்டனர்.

### காரமடை

காரமடையிலுள்ள ஷாவா லேஸ்தொழிலாளர் சங்கம், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை, சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி ஆகியவற்றின் சார்பில் மேதினஊர்வலமும்பொதுக் கூட்டமும் நடந்தன.

மாலை 5½மணிக்கு ஷாவா லேஸ் தொழிற்சாலை வாயிலிருந்து தாரை தப்பட்டைகள் முழங்க ஊர்வலம் புறப்பட்டு, முக்கிய வீதிகளின் வழியாகக் காந்தி மைதானத்தை அடைந்தது.

அங்கு நடத்த பொதுக் கூட்டத்திற்குக் கட்சியின் செயலாளர் தோழர் ஆர். சாம்பையன், மேட்டுப்பாளையம் வட்டாரச் செயலாளர் தோழர் எம். கே. கருப்பண்ணன், கோவை—நீலகிரி மாவட்ட சோஷலிச வாலிபர் முன்னணியின் கன்வீனர் தோழர் கண்ணுசாமி ஆகியோர் பேசினர்.

### சென்னிமலையில்

சென்னிமலை சின்னப் பிடாரியூரில் மே 6ந் தேதி மே தினவிழா மிகச் சிறப்பாக கொண்டாடப்பட்டது.

தியாகி சிவராமன் மன்றத்தின் சார்பில் காலையில்கொடியேற்று விழாவும், அதைத் தொடர்ந்து கபடி விளையாட்டுப் போட்டிகளும், 1 மைல் ஓட்டப்பந்தயம் முதலிய விளையாட்டுகளும் நடைபெற்றன.

மாலையில் பொதுக் கூட்டம் தோழர். சி. பி. முத்துசாமி தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் தோழர்கள் சி. எஸ். பொன்னுசாமி, என். கருப்புசாமி, எம். லட்சுமணன் ஆகியவர்கள் மேதினவிழாவைப் பற்றி மிகச் சிறப்பாக பேசினுர்கள். விளையாட்டுப் போட்டிகளில் வெற்றிபெறறவர்களுக்கு தோழர் சி. எஸ். பொன்னுசாமி பரிசுகள் வழங்கினுர். காலை 7 மணியிலிருந்து இரவு 10 மணி வரை சின்னப்பிடாரியூர் கிராமமே விழாக் கோலம் பூண்டிருந்தது.

## அ. தி. மு. க. மீது...

(1ம்பக்கத் தொடர்ச்சி)

பேசுகையில், "பாராளுமன்றத்திற்குச் சென்று மாயத்தேவர் என்ன பேசப் போகிருர்? தி. மு. க. வில் லஞ்சம ஊழல் ஏற்பட்டு விட்டது என்று தினசரி அதையே பேசுவார். திமுக சர்க்காரை ஒழிக்கவேண்டுமென்று இதுவரை எம். ஜி. ஆர். இரண்டு மனுக்களை கொடுதிருக்கிருர்- மாயத்தேவர் பாராளுமன்றத்தில் போய் மூன்ருவது மனுவைக் கொடுககப் போகிருரா? —என்று கேலி பேசினுர்.

மேலும் பேசுகையில் அ.தி.மு.க. விடம் அரசியல் பொருளாதாரத் திட்டம் உண்டா?'' இரு கம்யூனிஸ்டுக் கட்சிகளும் மாயத்தேவரைபார்லிமெண்டுக்கு அனுப்ப கூட்டுச் சேர்ந்திருக்கிருர்களே, இக் கட்சிகளின் திட்டம் என்ன?'' என்றும் திட்ட வீரர் கேட்டார்.

இந்தியாவில்ஏற்பட்டுள்ள எல்லாத்துன்பதுயரங்களுக்கும் நெருக்கடிகளுக்கும் காரணமான திட்டங்களையும் கொள்கைகளையும் உடைய இந்திரா காங்கிரஸை, எதிர்த்துமுறியடிக்க ஜனநாயக சக்திகள் சேர்ந்து போராடுவதுதான் திட்டம், அறிக்கை, சகலமும், என்பதை, பாவம், மோகன், அறியார் போலும்!

### மறைக்கிருர்

மந்திரி மோகன் மற்றுமொரு கேள்வியைத் தொடுத்தார். ஏதோ, பார்லிமெண்டிலே உள்ள எதிர்க்கட்சிகளில், சுதந்திராக்கட்சியும், ஜனசங்கமும் ,சிண்டிகேட் காங்கிரசும் மட்டுமே இருப்பது போலவும்—மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் மற்றுமுள்ள இடதுசாரி ஜனநாயகக் கட்சிகளும் அங்கே இல்லாதது போலவும் படம் காட்டி, அந்தக கேள்வியைத் தொடுத்தார்.

அதாவது:

"பார்லிமெண்டில் பொருளாதாரப் பிரச்சனைகள் வரும்போது, சுதந்திரா,ஜனசங்கம், ஸ்தாபனகாங்கிரஸ் போன்ற கட்சிகள் கேள்விகள் கேட்கிருர்கள். அப்போது மாயத்தேவர் என்ன பேசப்போகிருர்?'' - என்றும் கேட்டார்.

எதிர்க்கட்சி வரிசையில் இந்த 3 கட்சிகள் மட்டுமா இருக்கின்றன? மாற்றுக் கொள்கையு மாற்றுதிட்டமும் உள்ள மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியும் மற்றுமுள்ள இடதுசாரிக்கட்சிகளும், சர்க்காரின் ஜனவிரோதக் கொள்கைகளை எதிர்த்துக் கேள்விகள் கேட்கின்றபோது, அவர்களுடன் அ.தி.மு.க. வும் சேர்ந்து நிற்காதா? அதைப்பற்றியும் மந்திரி மோகன் பேசாமல், பிற்போக்குக் கட்சிகளை மட்டுமே குறிப்பிட்டுக் காட்டும் மர்மம் என்ன?— என்று மக்கள் பேசிக்கொள்ளுகிருர்கள்.

கடந்த 9-5-73ல் திண்டுக்கல் மணிக்கூண்டு அருகே நடந்த தேர்தல் கூட்டத்தில் மோகன் குமாரமங்கலம் பேசினுர்.

## 'உலகம் சுற்றும் வாலிபன்' மதுரையில் அதிமுக ஊர்வலம்

மதுரை, மே. 10— திரு. எம். ஜி. ஆர். நடித்த 'உலகம் சுற்றும் வாலிபன்' திரைப்படம் 11-ந்தேதிதிரையிடப்படுவதை யொட்டி, இங்குள்ள அதிமுக ஊழியர்களும், ரசிகர்களும் பெரும் ஊர்வலம் ஒன்றை இன்றுமாலையில்நடத்தினர்.

'உலகம் சுற்றும் வாலிபன்' சினிமா வெளிவராது என்றும், அந்தபபடம் வெளியிடப்படுவதைப் பார்ப்போம் என்றும அந்தப்படம் வந்துவிட்டால் தான் அ. தி. மு. க. வில் சேர்ந்துவிடுவதாகவும் சவால் விட்டு மேடை தோறும் பேசிய மதுரை முத்துவைக் கண்டித்தும், எம். ஜி. ஆரை வாழ்த்தியும் முழக்கம் எழுப்பினர்.

### முத்துவுக்கு இலவச பாஸ்

அந்தப்படம் வெளிவராது என்று பேசிய மதுரை முத்துவுக்கு 'உலகம சுற்றும் வாலிபன்' சினிமாவுக்கான இலவச பாஸ் ஒன்றை குமரி மாவட்ட அ.தி.மு.க.அமைப்பாளர் பதிவுத்தபாலில் அனுப்பி வைத்துள்ளார்.

இந்தியகம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், 13. (முதல் சந்துவடக்குச்சித்திரைவீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே. முத்தையா.